

# பாவேந்தருடன்...!

கவிஞர்

குடந்தை புகழேந்தி

சேகர் பதிப்பகம்

66/1, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர்,

சென்னை - 600 078. ☎: 471 43 25



முதற்பதிப்பு : ஏப்ரல், 2001


பாவேந்தரின் 111ஆவது பிறந்தநாள்
கவிதைத் திருவிழா வெளியீடு
29. 4. 2001

நூல் அளவு : 12.5 X 18 செ.மீ.
பக்கம் : 128

விலை ரூ. 32.

ஒளி அச்சு
கிறிஸ்ட் டி. டி. பி. சென்டர்,
19, பாரதீஸ்வரர் காலனி,
4ஆவது தெரு, சென்னை - 24.

அச்சிட்டோர்
ஸ்கிரிப்ட் ஆப்செட் பிரின்டர்ஸ்,
பெரியார் பாதை,
சென்னை - 94.

# பொருளடக்கம்

பதிப்புரை

# பாவேந்தர் புகழை நாவேந்திப் போற்றுவோம்!

*'பாரதி! பழமைக்குப் பயணச்சீட்டு,*
*புதுமைக்கு நுழைவுச்சீட்டு..!'*

அறிஞர் அண்ணா அவர்களின் மதிப்பீடு!

தன்மானக் கொள்கை முரசாய் முழங்கியவர் பாவேந்தர் பாரதிதாசன்!

நாணயத்தின் இரு பக்கங்களாய் நம் தமிழகத்திற்கு வாய்த்தவர்கள் பாரதியும் அவரது தாசனும்!

பாரதி அன்பர்கள் பாரதியாரின் ஒரே வாரிசாய் விளங்கிப் புகழ்கொண்ட பாரதிதாசனை மதிக்க மறந்தது விந்தையான நிலை!

பாரதியின் பேரை நினைவூட்டும் வண்ணம் அவரது தாசனாகவே வாழ்ந்துகாட்டி வரலாறு படைத்தவர் பாரதிதாசன்!

தமிழ், தமிழ்மக்கள், தலைநிமிர்ந்து தன்மானத்தோடு வாழ, உரிமையுடன் வாழ, மூச்செல்லாம் பேச்செல்லாம் எழுத்து வீச்செல்லாம் கொள்கை மணம் பரப்பிக் குன்றென நின்றவர் பாரதிதாசனார்.

தமிழ் எழுச்சிக்கும் உயர்ச்சிக்கும் தம் சிந்தையையும் செந்தமிழையும் தந்து உரமேற்றி வாழ்ந்தவர் பாரதிதாசனார்.

முத்தமிழ் போற்றிய வித்தகரை, நித்திரை போக்கிய உத்தமரை, தன்மான முத்திரையான சுப்புரத்தினத்தை நற்றமிழ்நாடு நன்றியோடு நினைந்து போற்றுகிறது!

சென்னையிலே ஒரு செந்தமிழ்ச் சோலை, பாவேந்தர் பாசறை! திங்கள்தோறும் முழுநிலாக் கவியரங்கம் நடத்திக் கவிதை மிழற்றும் கருத்துப்பட்டறை!

பண்புடை நண்பர்கள், அன்புடன் கூடி நம் தமிழ்நாடும் நம் தமிழ்மொழியும் நம் தமிழ் மக்களும் சிந்தனை செய்து செயல்பல புரிந்து சிறப்பாய் வளர்ந்து செழித்திட, உறுதி பெறவும் ஊக்கம் பெறவும், உள்ளங்கலந்து உரையாடி, உறவாடி ஒற்றுமை உணர்வைப் பெற்றிடும் வண்ணம், தம் இல்லத்தையும் தமிழ் உள்ளத்தையும் களமாய்ச் செய்து, அன்பை வளமாய்ப் பெய்து பல்லாண்டுகளாய்ப் பயன்மிக வளர்த்துப் பாவேந்தர் பாசறை பளிங்கென விளங்கிட நாளும் உழைப்பவர் நண்பர் இளமாறன்.

விளம்பரமின்றி, வீண் பகட்டின்றி வேர்விட்டு வளர்ந்து விளங்கும் பாசறை, விழுதுகள் நூறாய் வினை செயும் மறவர் சுற்றிலும் சூழ்ந்திட நிழல்தரும் ஆலமரமாய் நிறைவாய் விளங்கும் பாசறை!

பாசறை கண்டு பரிவுடன் வளர்க்கும் பக்குவம் கொண்ட பண்புடை நண்பர் இனமானக் கவிஞர் இளமாறன் அவர்கள். அவர் தம் பேரவா, அவர்தம் முயற்சி, புதுவை மண்ணில் பூத்த தமிழ்மலர், புரட்சிக்கவிஞர், புதுநெறி

காட்டிய புதுமைக்கவிஞர் பிறந்தநாளில் கவிஞர்கூடிக் கவிதைத் திருவிழா காணும் வழியைக்கண்டார்; பாவேந்தர் வாழ்ந்த வளமனை தன்னில் கவிஞர்கள் கூடி, கவிக்கோமானைப் பாடிப் போற்றிக் களிக்கும் திருநாள் கண்டார்.

நாடெங்குமுள்ள பாடுங்குயில்களைத் தேடிக்கூவிக், கூடச் செய்தும், கவிபாடச் செய்தும், பாவேந்தர் திறம் பரவிப் பரவிப் போற்றிப்போற்றி, மீண்டும் மீண்டும், மேலும் மேலும் தமிழ் உரம் கூட்டித், தமிழ்ப்பயிர் வளரத் தன்மானம் எனும் தண்ணீர் பாய்ச்சும் தமிழ்விழா எடுக்கும் தளபதியானார். அவர் பேரணியில் அனைவரும் இணைந்தோம்.

தமிழ்க் கவிஞர்கள் புதுவை மண்ணில் புகுந்து புத்தொளி பெறும் ஒரு திருநாள், கவிதைத் திருவிழா!

புதுவை மண்ணில் புதுமை புரியும் புலவர் பலரும் புரவலர் பலரும் பொங்கும் அன்புடன் ஒன்று கூடிப் புரட்சிப் பாவலர் புகழ்தனைப் பாடிப் புதுவெள்ளம் போல் புதுவையில் பேரணி நடப்பது விந்தை! நடப்பது உண்மை!

பாவேந்தர்க்குப் பிறந்தநாள் விழா எடுத்துப் பாராட்டும் புதுவை அரசும் தமிழகக் கவிஞர்க் குழுவைப் பரிந்து வரவேற்று விருந்தும் அளித்து, உடன் இருந்து உற்றுழி உதவும் பண்பினில் சிறந்தது.

*எங்கள் பகைவர் எங்கோ மறைந்தார்*
*இங்குள்ள தமிழர் ஒன்றாதல் கண்டே!*

எனும் மொழிக்கு ஏற்ப, எல்லாருங்கூடி எடுக்கும் பெருவிழா – பாவேந்தர் பிறந்தநாள் கவிதைத் திருவிழா!

எங்கெங்கும் தமிழ்ப்பணி இயற்றும் கவிஞரை இனம் கண்டறிந்து, தேடி அழைத்து மரபுப் பாவலர் விருதும் தொகையும் பரிசளித்துப் பாராட்டும் ஊக்கப்பணியும் உருவாயிற்று.

தமிழ்த்தொண்டு செய்து பழுத்த தன்மானக் கவிஞர்களை, செயல்வீரர்களை, மக்கள் மறந்த மாண்புடையோரை, மன்றம் ஏற்றி, மனம் குளிரக் குளிர அவர்தம் தொண்டினைச் சொல்லி அவர்களைப் போற்றிடும் கடமையை அன்று புதுவையில், அதுவும் நமது பாவேந்தர் வாழ்ந்த திருமனையில், தாயன்பு பொங்கும் தமிழ் விழா காணும் நிகழ்ச்சி! புதுப்புனல் போன்ற புரவலர் பலரும் விருதும் பரிசும் விழைந்து அளித்து விழாச் சிறப்பாக நடந்திடும் காட்சி விந்தைக்காட்சி! விழுமிய காட்சி! புதுவையில் இஃதோர் புதுமைக்காட்சி!

தன்மானக் கவிஞர்தம் தடத்தில் வாழும் தமிழ்த் தொண்டர்கள் திறம் அறிந்து பாராட்டும் தகுதிக்குத் தமிழ்த் திருவிழா, பாவேந்தர் பிறந்தநாள் கவிதைத் திருவிழா!

இவ்வாண்டு (29.4.2001) பாவேந்தர்க்கு
நூற்றுப் பதினொன்றாவது பிறந்தநாள் திருவிழா!

பாவேந்தர் பாசறை நடத்தும் ஐந்தாவது
கவிதைத் திருவிழா!

கவிஞர்கள் படைத்தவை கவிதைத் தொகுப்பாய், நான்காவது மலராய் வெளிவருவது ஒன்று.

பாவேந்தருடன் சென்னையில் கடைநாள் பொழுதில், உதவியாளராய் உவந்து உடனிருந்த உழுவலன்பர் கவிஞர்

குடந்தை புகழேந்தி என்பவர், குளிர்மனச் செம்மல்! அவர் கொடுக்கும் நூல் மற்றொன்று.

சென்னையில் உள்ள, ‘அமுதசுரபி’ ஆசிரியர் கலைமாமணி விக்கிரமன் அவர்கள், அனைத்துலக எழுத்தாளர் சங்கத்தின் ஆற்றல்மிகு தலைவர். அவர் தலைமையில் எழுத்தாளர் சங்கத்தின் மாதாந்திரக் கூட்டச் சொற்பொழிவில், குடந்தை புகழேந்தியார் உரைத்த அனுபவச் செய்திகள் உள்ளம் புகுந்தன; ஊக்கம் தந்தன. எழுதித் தருமாறு கேட்டுக்கொண்டேன். அவரும் இசைந்து எழுதித் தந்தார். அதுவே இந்நூல்; ஆவணம் எனலாம்.

பாவேந்தருடன் பலமுறை பழகியவர் அறிஞர் எஸ். நல்ல பெருமாள் அவர்கள். கம்பன் கவிநயச் செல்வர் என்னும் புகழ்ப்பெயர் படைத்தவர்.

அவர்கள், பாவேந்தர் பாடற்சிறப்பைப் பலமுறை கூறியுள்ளார்கள். பெருங்கவிஞர்களின் பா மரபுடன் பாவேந்தர் ஒத்துவரும் கவிமரபை விதந்தும் வியந்தும் கூறி மகிழ்வார்; மகிழ்விப்பார்.

இந்நூலில் அப்பெரியாரது சுவையுணர்வின் விருந்தும் சேர்தல் தகும் என விரும்பினேன். அவர்களும் மகிழ்ந்து இசைந்தார்கள்.

எனினும் திடுமென உடல் நலிவுற்றுச் சோர்ந்த நிலையில், ஓரளவே கூறமுடிந்தது. அவர்கள் கூறக்கேட்டு எழுதி வந்தார் நண்பர் ஓவியப் பாவலர் வலவன். அவருக்கு அன்பு நன்றி உரியது.



உடல் நலமற்ற வேளையிலும் உளம் பொங்கப் பாவேந்தர் பாத்திறனைக் கூறி உதவிய அறிஞர் பெருந்தகையாளருக்கு மனமார்ந்த நன்றியுடையேன். இலக்கிய நெஞ்சின் ஈரமிகும் சுவைச்சாரலை இந்நூலில் இரு பகுதிகளாக இணைத்து மகிழ்கிறோம். வாசக வண்டுகள், தமிழ்த்தேன் தும்பிகள் விருந்தை அருந்தலாம்.

மாபெரும் கவிமன்னரின் மாண்புடை நெஞ்சை மாநிலம் அறிய மனமகிழ்ந்தளித்த மதுத்தமிழ்க் கவிஞரை மதித்துப்போற்றி, வாழ்த்தும் நன்றியும் வைத்து வணங்கி அவர்தம் வாயுரையை, பாவேந்தரின் இறுதிக்கால வாழ்வுரையை வழங்கி மகிழ்கிறோம்.

வாழ்க பாவேந்தர் புகழ்! வளர்க அவர்தம் தமிழ்த்தொண்டு! புதுவையில் நடைபெறும் பாவேந்தர் கவிதைத் திருவிழாவில் இந்நூல் வெளியிட அன்புடன் துணைநின்றார், சென்னை பாவேந்தர் பாசறையின் செயல்மறவர். இனமானக் கவிஞர் முனைவர் இளமாறன்! அவர்கட்கு உளமாறந்த நனறி.

எத்திக்கும் புகழ் பரப்பும் முத்திரைத் திருவிழாவில் இந்நூலை வெளியிடும் வித்தகர்க்கும், முதல்நூல் பெற்றுச் சிறப்பிக்கும் மேலோர்க்கும், குழுமியிருக்கும் பாவேந்தர் தோட்டத்துப் பாடுங் கவிக் குயில்களுக்கும் பொது மக்களுக்கும் நன்றியும் வணக்கமும் அன்புடன் வழங்கி மகிழ்கிறேன்.

சேகர் பதிப்பகம் *வெள்ளையாம்பட்டு சுந்தரம்*

①

# ஒரு கவிஞன்-பாரதிதாசன்!

கம்பன் கவிநயச் செல்வர்
**எஸ். நல்லபெருமாள்**

பாரதிதாசனின் கவிதைகளின் தனிச்சிறப்பு அவைகளிலுள்ள கற்பனையும், கலையழகும் கருத்தின் தனிவலிவும் சொற்படிவச் சிற்பமென ஜொலிக்கும் மொழி வளமும் அவரது இசைவான உவமைகள்தாம்.

தமிழின் மறுமலர்ச்சி தொடங்கியதும் ''சொல் புதியதாய் பொருள் புதிதாய், சுவை புதிதாய்'' கவிதைகள் தோன்றின. கருத்தில் புரட்சியும், சொல்லில் எளிமையும் உவமையில் புதுமையும் கலந்து தமிழுக்கு அழகு ஊட்டுபவர் பாரதிதாசன். அவரது கவிதைகளில் எல்லாம் புதுமையான உவமைகள் மலிந்துகிடப்பதைக் காணலாம். பாரதிதாசன் பெண்களை அன்னநடை, சின்னநடை, பெருந்தடங்கண் என்றும் ரம்பை, ஊர்வசி, திலோத்தமை என்றும் வர்ணிக்கவில்லை.

*சிப்பம் பிரித்தெடுத்த சீனத்துப் பொம்மை*
*படிகத்துப் பதுமை* என்று வருணிக்கிறார்.

பல்லுக்கு உவமைகள் முல்லையும் முத்தும்தான் கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்குக்கூட. ''முல்லையை முத்தென்றாலும் பவழத்தை இதழென்றாலும்'' 'முல்லையும்



கடல் முத்தும் வந்து எதிர்ப்பினும் வெல்லும் வெண்ணகையாய்' என்றெல்லாம் வருணிப்பான்.

பாரதிதாசனின் மயிலிறகின் அடியைப்போல் பல்லிலெல்லாம் ஒளி இருக்கும்.

*அருவிகள் வயிரத்தொங்கல்*
*அடர்கொடி பச்சைப்பட்டே*
*குருவிகள் தங்கக் கட்டி*
*குளிர்மலர் மணியின் குப்பை!*

*எருதின் மேல் பாயும் வேங்கை*
*நிலவுமேல் எழுந்த மின்னல்!*
*சருகெலாம் ஒளியின் தங்கத்*
*தகடுகள் பாரடாநீ.*

பெண்கள் கண்களுக்கு, குவளையும், கருவண்டும் வில்லும் வேலும் கூற்றமும்தான் நம் பழங்கவிதைகளில் காணும் உவமைகள்.

வெண்முகத்தில் “நீலம்” விளையாடிக் கொண்டிருக்கும்.

கவிப்பண்பிலே கவிஞர் ஒரு புதுமையைக் காட்டுகிறார். சூரியனை மறைக்கிறது மேகம். சூரியனின் கதிர்கள் விழும் மேகத்தின் புறம் ஒளி கொள்கிறது.

*பொழிகதிரை மறைத்து ஒலிகொள் முகிலைப்போல*
*புனைஆடை பொன்னொளியைப் பெற்ற தென்றல்*
*அழகுடையான் திருமேனி என்னே! என்னே!*

மேலும்,

*கன்னங் கரேலென்ற காடுபட்ட மேகத்தில்*
*மின்னி வெளிப்பட்ட விண்மீன் போல் உன்றன் விழி*

ஆங்கிலக்கவி கீட்ஸின் குயில்பாட்டின் சில வரிகளை, 'மந்திரக் கவிதை'யென்று திறனாய்வாளர்கள் சொல்வதுண்டு.

பாரதிதாசரின் புரட்சிக்கவி (பில்கணீயம்) என்ற கவிதையில் சில வரிகள் - மந்திரக் கவிதை.

உதாரன் : நீலவானத்தை காண்கிறான். முழு நிலவை காண்கின்றான். கவிதை பிறக்கிறது.

**நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து**
**நிலாவென்று காட்டுகின்றாய் ஒளி முகத்தை**
**கோலம் முழுதும் காட்டிவிட்டால் காதல்**
**கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ!**

'மந்திரக் கவிதை', 'அட்சர லட்சம்' அமைந்த கவிதை! அழகே உருவெடுத்த கவிதை. வானத்து மெல்லியளாளுக்கு மேனி மறைக்க ஆடை நீலவான். அவள் முகம் சந்திரன்.

கவிதையிலும், கற்பனையழகு, உவமையழகு, இவைகளோடு (தொனியையும்) கூடக் காணலாம்.

உதாரன் : நிலவைப் பாடும்பொழுது, அமுதவல்லி காத்திருந்த மேடையண்டை அழகிய பூஞ்சோலையில் நிற்கிறான்; சுமை சுமையாய் உவமைப் பெருக உணர்வு வெள்ளம் தூண்டிவிடப் பாடுகிறான்.

கவிஞனது உவமைத் திறனையும், கற்பனை ஆற்றலையும், எண்ணி எண்ணி மகிழ்வதல்லால், சொல்லால்



விண்டுரைக்க மாட்டாமல் தயங்குவோம். இந்தக் கவிதை தரும் இன்பம் உவமையிலா இன்பம். மேலும் உவமைப் பெருக்கைப் பாருங்கள்.

*வானச் சோலையிலே பூத்த தனிப் பூவோ!*

தனிப் பூவோ என்று குறிப்பதால் விண்மீன்கள் பூக்களென்றும் தனிப்பூ சந்திரன் என்றும் குறிப்பு.

*சொக்க வெள்ளிப் பாற்குடமோ! அமுத ஊற்றோ!*
*காலை வந்த செம்பருதிக் கடலில் மூழ்கிக்*
*கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பிழம்போ!*

மாறாத சூரியனை 'மாறாத வெய்யோன்' என்றான் கம்பன். உவமையிலே புரட்சி சூரியனும் மறுபிறப்புக் கொள்ளுகிறான். கடலில் மூழ்கிக் கனல்மாறிக் குளிரடைந்த சந்திரனாம். இதுவும் கவிஞன் காட்டும் மந்திர ஜாலம். மேலும் கவிதை உலகில் காணக் கிடைக்காத மாணிக்க உவமை.

*காரிருள்தான் சிரித்ததுண்டோ!*
*பெருஞ்சிரிப்பு! ஒளி முத்தோ நிலவே நீதான்!*

தமிழ்மொழி மாத்திரமல்ல, மற்ற மொழிகளிலும் இந்த அபூர்வ உவமையைக் காணுதல் அரிது.

சொல்லுக்குச்சொல் அழகும், பொருளுக்குப் பொருள் ஒளியும் வரிக்குவரி உவமையும் காணும் ஒரு கவிதை மலைக் காட்சியைக் காட்ட.

சாதாரண பொருள்கள்கூட பாரதிதாசன் கையில் உவமைத் திறத்தால் ஒரு புதுக் கவர்ச்சி கொள்கிறது.

விழுந்துபடும் செங்கதிரை வேல் துளைத்ததைப்
போல் உழுந்து வடை.

*தாழையின் முள் போன்ற சீரகச்சம்பா!*

மேலே சொன்ன உவமைகளில் பாரதிதாசன் தனிச் சிறப்புகளைக் கண்டோம். இவைகளுக்கு எல்லாம் மேலாகத் தமிழுக்கு அவர் காட்டும் உவமையும் தமிழை உவமையாகக் காட்டுவதும் தமிழுக்கே சிறப்பைத் தருவன.

ஒளியெல்லாம் நடையெல்லாம் தமிழின் அழகெல்லாம் ஒரு கணத்தில் நம் கண்ணெதிரில் காட்டுகிறார்.

மயிலே! செந்தமிழே
மாம்பழத்தின் சுவை 'தமிழ்நிகர் சுவை'
காதலியின் கன்னம் 'தமிழ்ச் சுவடி'
காதலி 'தீந்தமிழ்'
காதலனும் காதலியும் 'தமிழும் அன்பும்'
உணவு 'வல்லார் இலக்கியம்'

பாண்டியன் பரிசில் பாவேந்தர் ஒரு காட்சியைச் சித்திரிக்கின்றார்.

செய்யாற்றில் ஓடம், அன்னம், நீலி இவர்களை 'தார் தாங்கும் தட்டம்போல்' தாங்கி நிற்கிறது. ஓடம் அன்னம்போல் செல்கிறது ஆற்றில். அன்னம்

காட்டுகின்றாள்! 'பாரடி நீ அந்தி காட்டும் சித்திரத்தை-மேற்றிசை வானத்தில்' என்று. செய்யாற்றில் ஓடம் நிற்பது போல் அங்கும்

**தேங்கி நிற்கும் பொன்னாற்றில் செழுமாணிக்கச்**
**செம்பருதிப் படகோடும்கீழ்த்திசைவான்**
**வாங்கிநிற்கும் ஒளியைப்பார் காட்சித்தேனில்**
**வண்டடி நாம்...**

செய்யாற்றில் ஓடம். மேற்றிசை வானத்திலும் ஓடம். நிலத்தில் 'தேங்கி நிற்கும் புனல் ஆறு.' வானத்தில் 'தேங்கி நிற்கும் பொன் ஆறு.' ஆற்றில் 'செல்லா நிற்கும் செம்படகு' வானத்தில் செல்லா நிற்கும் 'மாணிக்கச் செம்பருதிப் படகு'

மேற்குப் புறத்துச் செவ்வானத்தில் ஒளி. அந்த ஒளியினை வாங்கி நிற்கும் கீழ்த்திசை வான்.

என்ன கற்பனை, என்ன! உவமைகள்.

இதே காட்சித்தேனை அன்னமும் நீலியும் கவிஞனும் மாத்திரமல்ல நாமும் அனுபவிக்கிறோம்.

புது உவமைகளுக்கு- 'ஒரு கவிஞன்' - பாரதிதாசன்!

②

## இருபதாம் நூற்றாண்டின் கம்பன்

# பாரதிதாசன்

கம்பன் கவிநயச் செல்வர்
எஸ். நல்லபெருமாள்

"பாரிலதிசயம் பாரதி" என்றார் சுத்தானந்தர். அந்தப் பாரதியோ "கம்பனைப் போல் புலவன் தோன்றியதில்லை" என்று கம்ப நாடரைப் போற்றினான்.

தமிழுக்குத் திருக்குறளும் கம்பராமாயணமுமே இருவிழிகளைப் போன்றவை என்ற நோக்கோடு தமிழுக்குக் கதி கம்பனும் திருவள்ளுவனும் என்றார் செல்வக் கேசவராயப் புலவர். இப்படிக் கம்பன்புகழ் பாடியவர்கள் வரிசையில் "கம்பசித்திரம்" வரைந்த பி.ஸ்ரீ.யும் ஒருவர்.

நான் பாரதிதாசனின் கவிதைகளில் தோயும் பொழுதெல்லாம் எனக்குத் தோன்றும் எண்ணம். பாவேந்தரில் ஊடுருவியுள்ள கம்ப சித்திரம், எப்படி அழகின் சிரிப்பாக, குடும்பவிளக்காக, சஞ்சீவி பர்வதத்தின் சாரலாக நம்மை மயக்குகிறது என்ற உண்மையைத்தான் நான் உங்களுக்கு உரைக்கப் போகிறேன். கதைக்கப்போகிறேன்.



**இன்னொரு கம்பனும் வருவானோ**
**இப்படியும் கவி தருவானோ**

என்று பாடினார் நாமக்கல் கவிஞர். அவர் இன்று இருந்தால் பாரதிதாசன் கவிதைகளைப் படித்துவிட்டு,

**இன்னொரு கம்பனும் வந்தானே**
**அவன் பாரதிதாசன் என்போனே**

என்று புதுப்பாட்டுப் பாடியிருப்பார். புகழ்க் கீதம் இசைத்திருப்பார். கம்பனை நாம் போற்றிட எத்தனையோ, காரணங்கள் உண்டு. அவற்றுள் முதன்மையான காரணமாக நான் கருதுவது:

'தமிழுக்கு வார்த்தை தந்த கம்பன்' எனும் காரணமே. சொல்வளம் மிக்க மொழியில்தான் இப்படி நுண்ணறிவு படைத்த புலவர்கள் தோன்ற முடியும். சொல் வளமில்லா மொழியில் புலவர், இருக்கிற சொல்லை வைத்து எண்ணியதைக் கூறிவிடுவது எளிய செயலே.

பாரதி பாட்டில் "சொல்லுக்கு சொல் சுவை ஏறுமேயடா" என்று வியந்தார் கவிமணி. கம்பன் கவிதையில் அவ்வியப்பு முழுமை பெறுகிறது. கம்பனைப்போல இடத்துக்குத் தகுந்த சொற்களை யார் படைத்தார்கள்? கவிதையைச் சொல்லும்பொழுது "செவிநுகர் கனிகள்" என்கிறார். அரசுரிமையைச் சுட்டும்பொழுது "மயில்முறைக் குலத்துரிமை" என்கிறார். இப்படிப்பட்ட அரிய சொல்லாட்சிகளை, புதிய சொல்லாட்சிகளைப் புதுமைச் சொல்லாட்சிகளை நாம் பாரதிதாசனிலும் பார்க்கலாம்.

மன்னனுக்குப் பெண்பாலாக மன்னி என்ற சொல்லையும், காபி தேநீரைச் சுட்டுவதற்கு 'சுவைநீர்' என்ற சொல்லையும், சாணத்தைக் குறிப்பதற்கு 'ஆப்பீ' என்ற பழஞ்சொல்லையும், வட்டார வழக்குச் சொல்லிற்கு "ஒட்டாரம்" என்ற சொல்லையும் பயன்படுத்திப் பாரதிதாசன் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கம்பனாகத் திகழ்கின்றார் - என்று சொன்னால் அது மிகையன்று.

கேரளம் என்று சொல்லப்படும் மலைஞாலத்தில் தோன்றிய கவிஞர் வள்ளத்தோலை விமரிசகர்கள் 'சப்த சுந்தரர்' என்று போற்றுகிறார்கள். அவர்கள் வழியே தமிழ்க் கவிதையுலகுக்குக் கிடைத்த 'ஒலியழகர்'தாம் நமது பாரதிதாசன் என்பேன்.

பாரதிதாசனின் ஓசைநய ஒலிஅழகு வரிகள் இவை:

**காராரும் வானத்துக் காணும் ஒளி நிலவே**
**நீராரும் தண்கடலில் கண்டெடுத்த நித்திலமே!**

பெண்குழந்தைத் தாலாட்டில்தான் எத்தனை வீரத்தைப் பகுத்தறிவைக் குழைத்துத் தருகிறார் - கம்பனைப்போலப் பாவேந்தர்.

பாரதிதாசனில் பிரச்சார வாடையும் இல்லாமல் இல்லை. "இராமாயணம் என்னும் நலிவு தரும் கதை" என்று அவர் சார்ந்திருக்கிற இயக்கத்தின் கொள்கை காரணமாகச் சாடிய பொழுதும் அவர் உள் மனத்தின் அடியாழத்தில் கம்பன் மீது ஒரு காதல் இருந்திருக்கிறது.

பாரதியைப் போல நேரடியாகக் "கம்பன் போலொரு மானுடன் வாழ்ந்ததும்" என்று அவர் பாராட்டாவிட்டாலும்



கம்பனில் டி.கே.சி. போன்றவர்கள் திருத்தம் காண முற்பட்ட பொழுது சீறியெழுகிறார் பாரதிதாசன்.

"கம்பனைத் திருத்த வந்த இக்கொம்பன் யார்?" என்று வினாக் கணை தொடுக்கிறார். டி.கே.சி. தொகுத்தளித்த கம்பராமாயணத்தைத் தமது குறுங்காவியத்தில் "காலேயரைக்கால் கம்பராமாயணம்" என எள்ளி நகையாடுகிறார். இதிலிருந்து அவர் கம்பன் கவிதையில் உள்ளூறத் தோய்ந்து மகிழ்ந்திருக்கிறார் என்பது புலனாகவில்லையா?

எதிர்பாராத முத்தத்தில் குமர குருபரரின் வரலாற்றைக் கூறியிருப்பதும், அவர் கவித்திறனைப் போற்றியிருப்பதும் நோக்கும்பொழுது பாரதிதாசன் உள்ளம் முழுமையாக பக்தி இலக்கியங்களை மறுத்துவிடவில்லை என்பதை உணர்கிறோம்.

மேலும் கம்பன், மில்டன், பாரதிதாசன் இவர்கள் படைப்பில் எபிதெட் (Epithed) உண்டு. சான்றாகக்

கம்பன் : நிறை தவத்தின் நிறை
பாவேந்தர் : திருத்தமுற நிறுத்திவைத்த

கம்பர் இராமனைச் 'சுந்தரப் பொன் தோளானை' என்று கம்பீரமாகக் கழறுவது போலப் பாரதிதாசனும் 'தடைக்கற்கள் உண்டென்றாலும் தடிந்தோள் உண்டெனச் சிரித்தாய்' என்கிறார்.

கம்பராமாயணம் நாட்டுப் படலத்தில்,

தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கம் தாங்க
கொண்டல்கள் முழவமாடக் குவளைக்கண் விழித்து நோக்க

என்று பாடுவதுபோல் பாரதிதாசனும்

தும்பியார் இசையரங்கு துவக்கினார்
அன்னம் வீற்றிருந்தாள்

என்ற அழகான இயற்கை வர்ணனை பாடியிருப்பது ஒப்பிட்டு நோக்கி நாம் உவகை அடையத்தக்கதாம்.

கம்பர் இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை மாதோ என்று சொன்னதைப்போல் பாரதிதாசனும்

எல்லார்க்கும் எல்லாமும் என்ற இடம் நோக்கிச்
செல்கின்ற திந்த வையம் என்கின்றார்.

கம்பன் : கண்வழி புகுமோர் கள்வன் கொலோ?

பாவேந்தர் : விழிக்குள் போய்ப் புகுந்தான் - நெஞ்ச
வீட்டில் உலாவுகின்றான்.

என்று காதலை அழகாகக் கம்பன் வழியில், கண்ணிற் சிறந்த உறுப்பில்லை என்ற பழந்தமிழ் மரபை ஒட்டியும் கூறியிருப்பது சிந்தித்து மகிழத்தக்க தேன்துளிகள். கம்பர் இராமாயணத்தில் தற்குறிப்பேற்ற அணி நயம் விளங்குமாறு,

செய்யவன் இருந்தாள் செழுமணிக் கொடிகளென்னும்
கைகளைநீட்டி அந்தக் கடலொத்த ஐயனை
ஒல்லை வா வென்றழைப்பன

பாவேந்தர் : கருநாட்டில் கோபுரத்தின் கொடிகள் வா பகையே
என்றழைத்து நிற்பக் காண்பீர்!



இன்னுமொரு காதலோவியம் கம்பனில்.

அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்!

பாவேந்தர் : நீயவளை நோக்கினாய் அவளுமுன்னை நோக்கினாள்
கம்பர் : ஒட்டிய இரண்டுடலுக்கு உயிர் ஒன்றாயின.
பாவேந்தர் : சங்கமம் ஆவதுண்டாம்.

கம்பராமாயணத்தில் அசோகவனத்தைப் பாடும்பொழுது கம்பன் கதிரவன் ஒளிபுகா என்பான்.

பாவேந்தர் : கதிரவன் நுழையாத பூக்கமழும் சோலை!
கம்பர் : வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரை
பாவேந்தர் : தமிழ்பாடிடும் வண்டு.

நம் நாட்டுக் கவிகளோடு மட்டுமல்ல உலகமகா கவிகளோடும் ஒப்பிடத்தக்க வரிகளைப் பாவேந்தர் படைத்திருக்கிறார்.

கையிரண்டும் மெய்யிறுக கனஉதட்டில் ஊன்றினான்

என்று எதிர்பாராத முத்தத்தில் கூறுவார்.

“I am paradised in one another arms” என்று மகாகவி மில்டன் தன் ‘‘சொர்க்க நீக்கம்’’ (Paradise lost) எனும் காவியத்தில் கூறுவார். இருவரும் ஆலிங்கனத்தை இப்படி அழகாகப் பாடியிருக்கிறார்கள்.

நாடுகள் வேறானாலும் கவிஞர்களின் பாடல்கள் ஒன்றே; பார்வையும் ஒன்றே! படைப்பும் ஒன்றே! - என நாம் பாராட்டி மகிழ்கிறோம் அல்லவா!

## பாரதிதாசனோடு பழகிய அனுபவங்கள்

பாவேந்தரோடு பழகிய அந்தப் பசுமையான நாள்களில் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி அனுபவங்களை இப்பொழுது பகிர்ந்து கொள்கிறேன்.

பார்ப்பதற்கு முரடனைப் போன்ற தோற்றம் உடைய பாரதிதாசனின் உள்ளம் - குழந்தை உள்ளம். தோற்றத்தில் கம்பீரம்! பழக்கத்தில் கனிவு; மாற்றுக்கருத்தினரையும் மதிக்கும் பாங்கு! இவற்றைப் பாவேந்தரிடம் பார்க்கலாம். இன்றுள்ள சில கவிஞர்களைப் போலத் தன்னைத் தானே பாராட்டிக் கொள்வதையும் தனக்கே எல்லாம் தெரியும் என்ற ஆணவத்தையும் 'ஈகோ'வையும் பாரதிதாசனிடம் பார்க்க முடியாது.

கவிதையில் பல புதுமைகள் செய்யவேண்டும் என்று அவர் ஆசைப்படுவார்.

கவிதை நூல்கள் மேனாட்டு நூல்களைப் போல பலவண்ண அட்டைகளில் ஒருபக்கம் கவிதை அதன் எதிர்ப்பக்கம் அதை விளக்கும் அழகிய படங்கள். இப்படி விலை உயர்ந்த தாளில் அச்சிட்டு வெளியிடவேண்டும் என்பது அவரது நிறைவேறாத ஆசையாகப் போய்விட்டது.

அப்படி அச்சிட்டால், அவர் எழுதிய 'அழகின் சிரிப்பு' நூலை இயற்கை எழில் சொட்டச் சொட்ட நாம் வெளியிட்டால் வெளிநாட்டாரும் வியந்து அவரின் கவிதா மேதைத் தன்மையை எளிதில் உணர்ந்து கொள்வார்கள் அல்லவா!



நான் பாலபாரதி சா.து.சு. யோகியார் அவர்களுக்கு முப்பத்தைந்தாயிரம் ரூபாய் நிதி திரட்டி அத்தொகையைப் பாவேந்தர் கரத்தால் வழங்குமாறு விழா ஏற்பாடு செய்தேன். அன்று அவர் அடைந்த மகிழ்ச்சியை, ஆனந்தத்தை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. "இனித் தமிழ்நாட்டில் கவிஞர்கள் பிறக்கலாம், இருக்கலாம், பெருமை பெறலாம்.

"ஏன் என்றால் என் தம்பி நல்ல பெருமாள் இருக்கிறான் அவர்களைப் பாராட்டிச் சீராட்ட!" என்று சொல்லி மகிழ்ந்தார். அந்தச் சுயநலமில்லாத வெள்ளைமனம் படைத்த வீரக் கவிமன்னர், என் வீட்டு உணவை அவர் விரும்பி உண்டு என் துணைவியாரையும் பாராட்டியிருக்கிறார்.

அவர் அப்பொழுது கூறியது: "நல்லபெருமாள் எனக்குப் பிடித்தமான புலால்உணவு இல்லையே என்பதைத் தவிர மற்றபடி எல்லாம் நன்றாக செய்திருக்கிறார்கள்" என்று பாராட்டியிருக்கிறார்.

பாவேந்தர் ஒருமுறை என்னிடம் உங்களுக்கு எவ்வளவு பிள்ளைகள் என்று கேட்டார். நான் குறும்பாக உங்களின் கவிதைவரிகளான "காதலுக்கு வழிவைத்து கருப்பாதை சாத்த வழி ஒன்று கண்டதனால் ஒரேமகள் தான்!"என்று சொன்னேன். கவிஞர் "பேஷ்! என் கவிதையைப் படித்துவிட்டு அதன்படி நடக்க நீங்கள் ஒருவராவது முன்வந்தீர்களே" என்று பெருமகிழ்ச்சி அடைந்தார்.

ஒரு கவிஞனுக்கு வாழும்போதே பாராட்டு கிடைப்பதைப்போல வேறு மரியாதை என்ன தேவை! அதை மிகுதியாகவே பாரதிதாசன் பெற்றார் என்றுதான் நாம் கூறவேண்டும்.

எங்கள் வீட்டு ஊறுகாயைச் சுவைத்துவிட்டு, ''இது நாகர்கோவில் நாரத்தை'' என்று பாராட்டினார்.

தமிழ்நாட்டில் ஒரு குடும்பம் செய்யும் சமையல் முறைகளை மறுகுடும்பம் அறிவதில்லை. அப்படி அறிந்தால் சமையலில் பல புதிய முறைகள் தோன்றும். உணவில் சுவையும் கூடும் என்பது பாரதிதாசனின் கருத்து.

பாரதிதாசனின் பகுத்தறிவுக் கருத்துகள் பல வேகமாக வெளிப்பட்ட காரணத்தால்தான் அன்றைக்குப் பல புலவர்கள் அவரிடம் ஈடுபாடு காட்டாமல் புறக்கணித்துவிட்டார்கள். அவரை ஒதுக்க அவர் சார்ந்த இயக்கம் ஒரு கருவியாய் அமைந்துவிட்டது. என்னைப் போன்றவர்களுக்குக்கூட.

''சாணிக்குப் பொட்டிட்டுச் சாமி என்போர் செய்கைக்கு'' என வரும் வரிகள் வேப்பங்காயாய்க் கசக்கின்றன என்றுதான் சொல்லவேண்டும். இந்தப் பிரச்சார வாடைகளையெல்லாம் பொருட்படுத்தாமல் பாரதிதாசனிடம் நெருங்கிவிட்டவர்கள் அவரது உள்ளீடான கவித்துவ ஆற்றல் மிக்க கடலில் மூழ்கிப் பல முத்துக்களை எடுத்துத் தருவார்கள்.

காலந்தோறும் - எனக்கு அவரின் எழுதுமுறை (Method of writing) மிகவும் பிடிக்கும். கேரள மகா கவிஞனான குமரன் ஆசானின் மனைவி பானுமதி அம்மாள் பாரதிதாசனின் கவிதையில் இக்கவிதையை மிகவும் பாராட்டுவார். அதுதான் ''கனியிடை ஏறிய சுளையும்'' என்று வரும் கவிதை.



கேரளத்தில் பாரதியை வள்ளத்தோலோடு ஒப்பிட்டால், நாம் பாரதிதாசனை குமரன் ஆசானோடு ஒப்பிடலாம். இக்கவிஞர்கள் தேசியத்தோடு சமுதாய மறுமலர்ச்சிக்கும் பாடியவர்கள் என்பதால் இப்படி ஒப்பிட்டு உரைக்க நம்மால் முடிகிறது.

முடிவாகப் பாரதிதாசனிடம் நான் கண்ட குறையையும் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். அது என்னவென்றால், இளங்கோ அடிகளுக்குச் சிலப்பதிகாரம் போல், கம்ப நாட்டாழ்வார்க்கு இராமாயணம் போல், சுத்தானந்த பாரதியாருக்கு பாரத சக்தி மகாகாவியம் போல் பாரதிதாசனுக்கு என்று ஒரு பெருங்காப்பியம் இல்லை என்ற குறைதான் அது.

பாரதிதாசனில் எதை மறந்தாலும் இதை மறக்கமுடியாது. ஒவ்வொரு வீட்டிலும் கல்வெட்டாய்ச் செதுக்கிவைக்க வேண்டிய வரிகள் இவை:

*சாதி ஒழித்தல் ஒன்று - நல்ல*
*தமிழ் வளர்த்தல் மற்றொன்று.*
*பாதியை நாடு மறந்தால் மற்ற*
*பாதி துலங்குவ தில்லை!*

அரசியல் கட்சி சழக்கர்களால் தமிழகத்தில் மீண்டும் சாதி வெறி தூண்டப்படுகிற பொழுது பாரதிதாசனின் சாட்டையடி மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டே இருக்கும்.

வாழ்க பாரதிதாசன்! வெல்க அவர் தமிழ்வேட்கை!!



# பாடிப் பறந்த குயில் பாரதிதாசனார்

**இழந்தபழம் புகழ்மீள வேண்டும்; நாட்டில்**
**எல்லோரும் தமிழர்களாய் வாழ வேண்டும்**
**வழிந்தொழுகும் சுவைத்தமிழே பெருக வேண்டும்**
**மாற்றலர்கள் ஏமாற்றம் தொலைய வேண்டும்**
**விழுந்ததமிழ் நாடுதலை தூக்க என்றன்**
**உயிர்தனையே வேண்டிடினும் தருவேன்**

என்று தம் 'குடும்ப விளக்கில்' வீரமுழக்கம் செய்து பாடிச் சென்ற குயில் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்.

நாம் இழந்துவிட்ட தமிழ்நாட்டின் புகழினை மீண்டும் நிலை நிறுத்த வேண்டும். வழிந்தொழுக சுவைமிக்க தமிழ் பெருகவேண்டும். நாம் தமிழர்களாக தன்மானத்தோடு வாழ வேண்டும். நிலை குலைந்த தமிழ்நாட்டின் புகழைப் புதுப்பிக்க வேண்டும்.

பிறரை ஏமாற்றும் செயல் இங்கிருந்து தொலைய வேண்டும். தமிழ்நாட்டின் பண்பாட்டைக் காக்க நாம் உயிர்த்தியாகம் செய்யவும் தயாராக வேண்டும் என்று தமிழ் மக்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறார் கவிஞர்.

நாகரிக வளர்ச்சியில் நாம் நமது பழம்பெருமைகளை மறந்துவிட்டோம். பண்பாடுகளைப் பறக்க விட்டோம், இதைவிடத் தமிழனுக்கு அவமானம் வேறுண்டா?

இன்று தமிழன் தமிழனாக வாழவில்லை. பிறப்பால் தமிழனே தவிர, வளர்வதெல்லாம் மேலைநாட்டு நாகரிகத்தில்தான்.

நம்முடைய குழந்தைகள் தாய்மொழியை மறந்து ஆங்கில மோகம் கொண்டு அம்மாவை மம்மி என்றும் அப்பாவை டாடி என்றும் அழைப்பதைக் கண்டு நாம் உள்ளம் பூரிக்கிறோம். அரிச்சுவடி கற்றுத் தர ஆளில்லை. அகரமே தெரியாத மழலைகளை ஆங்கிலப் பள்ளிகளுக்கு அனுப்பிப் பெருமைப்படுகிறோம்.

இதை எண்ணிய பாவேந்தர் அவர்கள் சிந்தனை பொங்குகிறது. ஒரு தாய் தம் இளஞ்சிட்டுகளை விடியலில் எழுப்புகிறாள். சீயக்காய்த் தூள் கொண்டு அவர்கள் தளிருடலை நன்னீராட்டிப் பின் துவாலையால் துடைத்தாள். ஆடைபூட்டி அழகுபடுத்தினாள். பின்பு அமரவைத்து, வாழைத் தளிர் இலையில் பழம், சிற்றுண்டி வைத்து, உண்ணச் செய்தாள்; பின் காய்ச்சிய நறுநீர் பருக அளித்தாள்.

பாட நூல்களைச் செவ்வனே அடுக்கிப் பையில் வைத்து அவர்களை பள்ளிக்கு அனுப்பி வைத்தாள். கண்களுக்கெட்டிய தூரம் வரை வீட்டு வாயிலில் நின்று

பிள்ளைகள் செல்வதைப் பார்த்து இன்பம் எய்துகிறாள், வீட்டில் அவர்களுக்குத் தாயான அவளே வாத்திச்சி.

இந்த வரிகளைப் படிக்கும்போது மகிழ்ச்சியான ஒரு தமிழ்க் குடும்பத்தைத் திரைப்படத்தில் காண்பது போல் தோன்றுகிறது.

கவிஞரின் சொல்லழகைப், பாடலைப் படிக்கும்போது நன்கு உணர முடிகிறது.

பாரதியிடம் பழகுகின்ற வாய்ப்பு ஏற்பட்டபின் அவர் மேல் மிகுந்த பற்றுக் கொண்டு கனக சுப்புரத்தினம், பாரதிதாசனாக மாறியதைத் தமிழ் மக்கள் நன்கறிவர்.

**பாரதியால் மாறிய கவிஞர்**

பாரதியின் எழுச்சிமிகு பாடல்களில் மனத்தைப் பறி கொடுத்த பாவேந்தர் அவர்கள், பாரதியைக் குருவாகக் கொண்டு ஒழுகியவர். பாரதியாருக்கு வேண்டிய உதவிகளையும் செய்து மனம் மகிழ்ச்சியடைந்தவர்.

பாவேந்தரவர்கள் பாரதியிடம் கொண்ட பற்று அளவிடற்கரிது. குறிப்பாகத் தாய்மொழி தமிழ் என்னும் உணர்வைக் கணநேரமும் விடாப்பிடியாகக் கொண்டவர்.



பாரதியின் தமிழ் முழக்கம்

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண் டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலக மெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்.

என்னும் வரிகள் பாவேந்தர் மனத்தைத் தொட்டு அசைத்தன.

உலகிலே தொன்மையான மொழி நம் தமிழ்மொழி. நாகரிகத்திலே சிறந்த மொழி தமிழ்மொழி. பண்பாட்டிலே தலை நிமிர்ந்து நிற்கும் மொழி தமிழ் மொழி.

இத்தகைய பெருமையுடைய மொழி உலகத்தாரால் எள்ளி நகையாட, நாமெல்லாம் அறிவிலிகளாக, விலங்குகளாக வாழ்ந்திடும் அவலநிலை மாற வேண்டுமானால், கன்னல் மொழி தமிழின் குரல் உலகமெலாம் ஒலிக்க வேண்டும் - என்று கூறிய பாரதியின் எண்ணத்தை அப்படியே ஏற்றுக் கொண்டவர் பாவேந்தர் அவர்கள்.

இதே கருத்தைத் தம் 'தமிழியக்கம்' நூலிலே கூறுகிறார்.

தாயெழில் தமிழை என்றன்
தமிழரின் கவிதை தன்னை
ஆயிரம் மொழியிற் காண
இப்புவி அவாவிற் றென்ற
தோயுறும் மதுவின் ஆறு
தொடர்ந்தென்றன் செவியில் வந்து
பாயும்நாள் எந்த நாளோ?
யாரிதைப் பகர்வா ரிங்கே?

என்று தம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துகிறார்.

ஒரு நாட்டின் பண்பாடும் நாகரிகமும் உலகிற்குத் தெரியப்படுத்தும் கருவி இலக்கியமேயாகும். நம் தமிழ்ப் பண்பாடு, நாகரிகம், வாழ்க்கை, மரபு இவற்றைத் தெள்ளென வெளிப்படுத்துவது சங்க இலக்கியங்களாகும். அகச்சான்றுக்குக் காதலும் புறச்சான்றுக்கு வீரமும் விளக்கப்பட்டுள்ளன. பண்டைத் தமிழர்களின் வாழ்க்கை நெறியை மரபை, சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தும் கண்ணாடியாக அவை விளங்குகின்றன.

பண்டிதர்களன்றிப் பாமர மக்களும் தெரிந்து கொள்ளவோ புரிந்து கொள்ளவோ இயலாதவாறு பல புலவர்களால் பாடப்பட்ட நிரடான செய்யுட்களாய் சங்க இலக்கியப் பாடல்கள் திகழ்கின்றன. அதனால் அவற்றிற்கு உரை எழுதவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. உரையாசிரியர்கள் பலர் உரை எழுதினார்கள்.



இவ்வாறு தமிழ் இலக்கியங்களைச் சாதாரண மனிதனும் தெரிந்துகொள்ள எளிய தமிழ்ச் சொற்களால் கவிதைகள் படைத்து மக்களை ஈர்த்தவன் பாரதி. அதற்கு அவன் வாழ்ந்த காலமும் சூழ்நிலையும் அவனுக்குக் கைகொடுத்தன.

**வெளிநாட்டார் வருகை**

இந்த நாட்டின் மீது பலர் படையெடுத்தார்கள். மகா அலக்சாந்தரிலிருந்து முகலாயர்கள் காலம் வரை படையெடுப்புகள் நடந்துகொண்டே யிருந்தன.

இதற்குப் பின்னர் வாணிகம் செய்ய வந்த டச்சுக்காரர்களும், பிரெஞ்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும் நமது பாரதத்தில் காலூன்றி அவர்களின் ஆதிக்கத்தை வேரூன்றிவிட்டார்கள்.

முந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாக இந்தப் பாரதத்தை அடிமையாக்கிக் கோலோச்சினர் ஆங்கிலேயர்கள். கோலோச்ச வித்திட்டவன் இராபர்ட் கிளைவ்.

இந்த நாட்டில் அப்போது அரசாட்சி செய்து கொண்டிருந்த பலநூறு சிற்றரசர்களிடையே, பிரித்தாளும் சூழ்ச்சியினால் அப்பத்தைப் பங்குபோட்ட குரங்காய் வெளிநாட்டார், நம் மக்களை அடிமையாக்கிப் போர்க் கருவிகளால் பணியச் செய்து கொடுமைப்படுத்தியதை வரலாறு விளக்கும்.

இதைப் படம் பிடித்துக் காட்டினான் பாரதி தம் கவிதை வரிகளில்,

**இம் என்றால் சிறைவாசம்**
**ஏனென்றால் வனவாசம்?**

இவ்வளவு எளிமையான சொற்றொடரால் தம் கவிதைகள் மூலம் மக்களின் மனத்தில் தேசபக்தித் தீயைப் பற்ற வைத்தவன் பாரதி.

**வந்தே மாதரம்**

வடக்கே பக்கிம் சந்திர சட்டர்ஜி இயற்றிய **வந்தேமாதரம்** பாடலைத் தமிழில் மொழியாக்கம் செய்தவன் பாரதி. **வந்தே மாதரம், பாரத நாடு** எனும் கவிதைகளைத் **தேசிய கீதங்க்ள்** என்னும் பெயரில் மிதவாதியாக இருந்த அரசியல்வாதி வி. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் அச்சடித்து இலவசமாக எல்லோருக்கும் வழங்கினார்.

இந்தப் பாடலே ஆங்கில ஆதிபத்தியக் கோட்டையைத் தகர்க்கும் வெடிமருந்தாயிற்று. இதனை அழிக்க ஆங்கில அரசாங்கம் தடை விதித்தது.

வந்தேமாதரம் என்னும் வார்த்தைக்குப் பொருள் என்ன?

வடமொழிச் சொல்லான இதற்குப் பொருள், தாயை வணங்குவோம் என்பதுதான். இதில் என்ன



அச்சுறுத்தல் இருக்கிறது! இதைச் சொல்லக்கூடாது என்று தடை விதித்த ஆங்கில அரசாங்கத்தின் செயல் விந்தையிலும் விந்தை!

வெள்ளை ஏகாதிபத்தியம் பாரதியைக் கைது செய்யத் திட்டமிட்டது. இதை யறிந்த பாரதியார் யாருக்கும் தெரியாமல் புதுச்சேரிக்குச் சென்றுவிட்டார்.

**புதுச்சேரி**

இந்நகர் பிரெஞ்சு ஆளுகையில் இருந்து வந்தது. அதனால் பிரிட்டிஷ் அரசாங்கம் புதுச்சேரியிலுள்ள பாரதியைப் பிடிக்க முடியவில்லை.

அந்தக் கால கட்டத்தில்தான் குவளைக் கண்ணன் என்பவர் பாரதிக்கு அறிமுகமாகிறார்.

புதுச்சேரியில் அரவிந்தர், மகரிஷி வ.வே.சு. ஐயர் ஆகியோர் முகாமிட்டிருந்தனர். பாரதியும் இவர்களுடன் சேர்ந்து கூடிப் பேசலாயினர். அரவிந்தரை வரவேற்று உபசரித்தவர்கள் பாரதியும், மண்டயம் சீனிவாசா ஆச்சாரியாரும் ஆவர்.

வேதாந்த விசாரங்கள் பேசப்பட்டன. பாரதியார் பகவத் கீதைக்குத் தமிழ் உரை செய்ததும் இந்தக் கால கட்டத்தில்தான்.

இவற்றையெல்லாம் பற்றி இங்கே நான் குறிப்பிடக் காரணம், பாவேந்தர் பாரதியாருடன் நெருங்கிப் பழக ஆரம்பித்த சூழ்நிலையைத் தெரிந்து கொள்ளுவதற்காகவே எழுதுகிறேன்.

**உரிமை வேட்கை**

பாரதம் முழுவதும் ஒரே குரல். அதுதான் சுதந்தரம் என்ற குரல்.

வடக்கே பால கங்காதர திலகர் பெருந் தலைவராகத் திகழ்ந்தார். **சுதந்தரம் என் பிறப்புரிமை** என்று முழக்கமிட்டார். அதைத் தொடர்ந்து தென்னகத்தில் வ.உ.சி., சுப்பிரமணிய சிவா ஆகியோரால் தூத்துக்குடியில் 1908ஆம் ஆண்டு விடுதலை நாள் கொண்டாடப்பட்டு வ.உ.சியும் சிவாவும் கைது செய்யப்படுகின்றனர். நீதிமன்றத்தில் பாரதி சாட்சியம் அளிக்கிறார்.

புதுவை வந்த பிறகுதான் பாரதி வேத நூல் ஆராய்ச்சியில் ஈடுபடுகிறார். இதற்கு அடித்தளம் அமைத்தவர்கள் அரவிந்தரும், வ.வே.சு. ஐயருமாவர்.

தென்னகத்தில் வ.உ.சி.யும், சுப்பிரமணிய சிவாவும் சேர்ந்து விடுதலைப் பிரச்சாரத்தில் முனைகின்றனர். சிவாவின் அனல் கக்கும் பேச்சு மக்கள் உள்ளத்தில் திந்து நாட்டு விடுதலைப் போரில் எல்லோரும் தீவிரப்பங்கு கொள்ளச் செய்கிறது.



நாடு முழுதும் தேசபக்தர்கள் பேசும் கூட்டத்திற்குத் தடை. தடையை மீறிக் கூட்டத்தில் பேசியதற்காக வ.உ.சி.யும் சிவாவும் கைது செய்யப்பட்டு வ.உ.சி.க்கு இரண்டு ஜன்ம தண்டனையும் சிவாவுக்கு ஆறு ஆண்டுகள் கடுந்தண்டனையும் அளிக்கப்படுகின்றன. இச்செய்தி தமிழகமெங்கும் தீபோல் பரவியது; மக்கள் பொங்கி எழுகின்றனர்.

மணியாச்சி சந்திப்பில் கலெக்டர் ஆஷ் ஓர் இளம் வாலிபனின் கைத் துப்பாக்கியால் சுடப்பட்டுத் தானும் அதே துப்பாக்கியால் தன்னைச் சுட்டுக்கொண்டு அடையாளம் தெரியாமல் உயிரை மாய்த்துக் கொள்கிறான்.

அந்த இளைஞன்தான் வீரன் வாஞ்சிநாதன். இந்த நிகழ்ச்சி 1911இல் நடந்தது. வீரவாஞ்சிக்குத் துப்பாக்கி சுடும் பயிற்சி அளித்தவர் வ.வே.சு. ஐயர் அவர்கள்.

## நெருங்கிப் பழகும் நிலை

பத்தாண்டுக் காலம் புதுவையில் வாழ்ந்த பாரதி ஏராளமான கவிதைகள் படைத்து வெளியிட்டார். பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு, கண்ணன் பாட்டு, தத்துவக் கட்டுரைகள், சின்னச் சங்கரன் கதை ஆகியவை புதுவையில் படைக்கப்பட்டவையே.

இந்தப் பத்தாண்டுக் காலத்தில் பாரதியோடு பழகிய பெரும் வாய்ப்பு பாவேந்தர் அவர்களுக்குக் கிட்டியது. அதைத் தம் வாழ்நாளில் கிடைத்தற்கரிய பெரும் பேறாகவே பாவேந்தர் கருதினார்.

**பாவேந்தர் புதிய படைப்புகள்**

பாரதியைப் பாவேந்தர் அவர்கள் ஐயர் என்றுதான் குறிப்பிடுவார். பாரதி காட்டிய வழியில் தம் சீரிய கவிதைகளைப் படைத்தார்.

பாரதி புதுவையில் வாழ்ந்தபோது அவர் தொடங்கிய ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலத்தில் பாவேந்தர் கவிதைகள் தீட்டினார். நாடு விடுதலை பெறத் தேசியப் பாடல்களை இயற்றினார். தொண்டர் நடைப் பாட்டு, கதர்ப்பாட்டு, இராட்டினப்பாட்டு ஆகியவை அவர் பாடிய தேசிய எழுச்சிப் பாடல்கள்.

அவர் வாழ்நாளில் எழுதிய நூல்கள் பல. குறிப்பாக, சஞ்சீவி பர்வதத்தின் சாரல், குடும்ப விளக்கு, பாண்டியன் பரிசு, தமிழியக்கம், குறிஞ்சித் திட்டு, பிசிராந்தையர், பில்கணீயம், மணிமேகலை வெண்பா ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

**பாரதியார்**

பாரதிக்கு எப்போதெல்லாம் உள்ளத்தில் வெறி மூண்டதோ அப்போதெல்லாம் கவிதை வடித்தார்.



அவருடைய அடிமனத்தில் எழுந்த ஏக்கங்கள், வேட்கைகள் கவிதைகளில் இடம் பெற்றன.

கவிமணி தேசிய விநாயகம் அவர்கள் பாரதியைப் பாராட்டும் போது,

*பாட்டுக் கொருபுலவன் பாரதியடா! அவன்*
*பாட்டைப் பண்ணோ டொருவன் பாடினானடா! - அதைக்*
*கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா!*

என்று பாட்டுக்கொருவன் உண்டென்றால் அவன் பாரதியேதான் என்று ஆணித்தரமாக முத்திரை வைக்கிறார்.

**நமக்குத் தொழில் கவிதை**
**நாட்டிற் குழைத்தல்**
**இமைப் பொழுதும்**
**சோரா திருத்தல்**

என்று பாரதி நெஞ்சுயர்த்திக் கூறுகிறான். சமுதாயப் பார்வை, பலரோடும் பழகிய பழக்கம் கடினத் தமிழிலிருந்து எளிமை, இனிமை சேர்த்துப் புது வெளிப்பாடுகளைப் பொருள்நயத்தோடு தம் கவிதைகளில் உள்ளடக்கிக் காட்டிய காரணத்தால்தான் இன்று உலகமே அவனை மகாகவி என்று போற்றுகிறது; பாராட்டுகிறது.

**நான் அடைந்த பேறு**

அந்த வழியில் இன்னும் கொஞ்சம் மேலே சென்று தீப்பந்தக் கவிதைகளைப் படைத்தவர் பாவேந்தர் அவர்கள். பாரதி கையாண்ட சொற்களை விட, பாவேந்தர் எடுத்தாண்ட தமிழ்ச் சொற்கள் தனிச் சிறப்புடையவை.

இப்பேர்ப்பட்ட பெருமையும், புகழும், சிறப்பும் வாய்ந்த புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் அவர்களிடம் பழகும் வாய்ப்பு எனக்குக் கிட்டிய செய்திகளை இந்நூலில் அளித்து, உங்களுக்கு மகிழ்ச்சி தருவதோடு நானும் உங்களிலே ஒருவனாக அம்மகிழ்ச்சியில் கலந்துகொள்கிறேன்.

**என்னைப்பற்றி...**

நான் பாவேந்தரைச் சந்திப்பதற்கு முன்னரே தமிழ் நாட்டிலிருந்து வெளிவரும் நாளேடுகள், வார ஏடுகள், மாத ஏடுகள் ஆகியவற்றில் என் கவிதைகள் இடம் பெற்று வந்தன.

பாவேந்தரைச் சந்திக்கும் முன்பாக என்னைப் பற்றிச் சில செய்திகளைக் கூறினால்தான் கோவையான செய்திகள் அறுந்து போகாமல் தொடர்ச்சியாக வரும் என்ற காரணத்தால், எழுதித் தெரிவிக்க வேண்டிய கட்டாயம் உந்துகிறது.



நான் பிறந்த மண் கலைவளமும் நிலவளமும் கொழிக்கும் தஞ்சை மாவட்டம். சாலிய மங்கலம் கிராமம். சாலிய மங்கலம் என்ற பெயரைக் கேட்கும் போது பாகவத மேளா நினைவிற்கு வரும்.

என்னுடைய சிறிய பாட்டனார் அமரர் மகாதேவக் கலைஞர் என்பவர் ஆவார். அவர் சிறந்த தமிழ்ப் பண்டிதர். தமிழ் ஆசிரியராகப் பணியாற்றியவர். அவர்தான் சாலியமங்கலம் பாகவத மேளாவின் சூத்திரதாரி.

**கலைக்கு நிம்பம்**

'பிரகலாத சரித்திர' நாடகம் எங்கள் கிராமத்தில் சுமார் நானூறு ஆண்டுகளாக நடத்தப்பட்டு வருகிறது. நாடகம் தமிழில் அல்ல. தெலுங்கு மொழியில் தயார் செய்யப்பட்டது. பாடல்களும் தெலுங்கில் இயற்றப்பட்டவை. நாடக சூத்திரதாரியாகவும், நாடகப்பாடல்களைத் தாளக்கட்டுடன் பாடுபவராகவும் இருந்து பெருமை சேர்த்தவர் என் சிறிய பாட்டனார் மகாதேவக் கலைஞர். இதை யாரும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது.

அத்தகைய பெருமை வாய்ந்த அறிஞர்தான் எனக்கு அ என்ற அகரத்தை மணலில் எழுதிக் காட்டி எனக்கு பால பாடம் போதித்தவர். அவர் இட்ட பிச்சைதான் என்னை இந்த அளவிற்கு

உயர்த்தியது என்பதை இந்த நேரத்தில் நினைத்துப் பார்க்கிறேன்.

நான் ஆரம்பப் பள்ளிப் படிப்பைச் சாலியமங்கலத்திலும், அம்மாபேட்டை நடுநிலைப் பள்ளியிலும், பின் உயர்நிலைப் படிப்பைக் கும்பகோணம் நேடிவ் உயர்நிலைப் பள்ளியிலும் பயின்றேன். உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்த பிறகு கும்பகோணம் அரசினர் கலைக் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராக யிருந்த கவிராஜ பண்டிதர் கனகராச ஐயரிடம் முறையாகத் தமிழ் பயின்றேன்.

பள்ளிப்பருவத்தில் கதிரவன் **சோலைக்கதிர்** என்ற கையெழுத்து ஏடுகளுக்கு ஆசிரியராக இருந்து செவ்வனே நடத்தினேன்.

இவையே பிற்காலத்தில் நான் கவிஞனாக விளங்கத் தளம் அமைத்தவை.

நான் கவிஞனாகத் திகழ, என்னைக் கவிதை படைக்கத் தூண்டியவை, மகாகவி பாரதியாரின் கவிதைகள், ஆங்கிலத்தில் இன்ஸ்பிரேஷன் என்று கூறுவார்களே அந்த உந்தல் பாரதியாரின் கவிதைகளால் ஏற்பட்டதே.

இந்நிகழ்ச்சிகளைச் கூறிப் பின்னர் பாவேந்தர் சந்திப்பை விளக்கினால் தான் சுவை கூடும் என்பதால் குறிப்பிட்டேன்.

**பாவேந்தர் சந்திப்பு**

நான் பாவேந்தரைச் சந்தித்ததே ஓர் சுவையான நிகழ்ச்சி.

ஓர் அன்பர் மூலம் பாவேந்தரைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. பாவேந்தரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் நேரில் பார்த்ததில்லை; புகைப்படத்தில் அவரைப் பார்த்திருக்கிறேன்.

பாவேந்தர் அவர்கள் சென்னை தியாகராய நகரில் இராமன் தெரு பத்தாம் எண்ணுள்ள பெரிய வீட்டின் பின்புற வீட்டில் குடியிருந்தார். பாண்டியன் பரிசு பட முயற்சி நட்டத்தில் அழுத்திவிட்டதால் செலவு சிக்கனமாகச் சிறிய வீட்டில் குடி பெயர்ந்தார் என்னும் செய்தியைப் பிற்பாடு தெரிந்து கொண்டேன்.

என் நண்பர் என்னை அழைத்துக்கொண்டு பாவேந்தர் வீட்டில் நுழைந்தார். பாவேந்தர் அந்தச் சிறிய வீட்டின் முகப்பில் உள்ள திண்ணையில் சாய்வாகப் படுத்திருந்தார்.

எங்களைக் கண்டதும் எழுந்து உட்கார்ந்து இன்முகத்தோடு வரவேற்றார். எங்களை இருக்கையில் அமரச் சொன்னார். அமர்ந்தோம்.

நண்பர் வந்த விவரத்தை விளக்கிவிட்டுப் பாவேந்தருக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார். நான் பாவேந்தருக்கு வணக்கம் செலுத்தினேன்.

முதன் முதலில் என்னை உச்சித்தலை முதல் உள்ளங்கால் வரை ஏற இறங்க ஒரு முறை பார்த்து நோட்டம் விட்டார். பின் என்முகத்தைக் கூர்ந்து கவனித்தார். அவருடைய உதடுகளில் புன்னகை நெளிவதை என்னால் பார்க்க முடிந்தது.

பின்னர் என்னிடம் 'அமெரிக்கன் ரிப்போர்ட்டர்' பத்திரிகையைக் கொடுத்து ஆங்கிலத்திலும், தமிழிலும் எட்டு வரிகள் எழுதிக் காட்டுமாறு பணித்தார்.

பள்ளித் தேர்வு எழுதும் மாணவன் போல் அவர் இட்ட பணியைச் செய்து முடித்தேன். என்னிடம் இருந்த தாளை வாங்கிப் பார்த்தார். என் எழுத்தையும், என்னையும் மாறிமாறிப் பார்த்தார்.

புருவங்கள் உயரே தூக்கிப் பற்கள் தெரியச் சிரித்துவிட்டுக் கூறினார்:

'புள்ளாண்டான் நல்லா எழுதறான்; நான் இவனை வச்சுக்கிறேன்' என்று தேர்வின் முடிவைத் தெரிவித்தார்.

எனக்கு மகிழ்ச்சி எல்லை கடந்தது. தேர்வில் வெற்றிபெற்ற மாணவன் போல் என் மனம் துள்ளிக்



குதித்தது. அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் அடக்கிக் கொண்டேன்.

## இட்ட பணி

நண்பருக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டார்.

என்னை மட்டும் அங்கிருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டி அமரும்படி சைகை காட்டினார். நான் தயங்கித் தயங்கி நின்றேன். 'சங்கோசப்படாதே, இப்படி உட்கார்' என்று மனமகிழ்வோடு கூறினார். நானும் அமர்ந்தேன்.

எனக்கு என்னென்ன பணி என்பதை விளக்கினார். காலை எட்டுமணியிலிருந்து மாலை ஆறுமணி வரை வீட்டில் இருக்க வேண்டும் என்பதை என்னிடம் தெரிவித்தார். மதியம் என் வீட்டிற்குச் சென்று உணவு உண்டு வரவும் சம்மதித்தார்.

"உனக்கு எழுதறதற்கு என்னென்ன வேண்டுமோ அவற்றையெல்லாம் தயாரா வச்சிருக்கேன். நீ இன்னையிலேர்ந்து என் குடும்பத்திலே ஒருத்தனா ஆயிட்டே" என்று உரிமையோடு அன்பு கலந்த இணைப்பை வெளிப்படுத்தினார்.

என் மனம் சிறகடித்துப் பறந்தது.

நான் பாரதியைப் பார்த்ததில்லை. ஆனால் பாரதியாரிடம் தாசனாக இருந்த கவிச்சிங்கத்தை அன்று

பார்த்தேன். பாரதிக்குத் தொண்டு செய்யும் உணர்வு எனக்கு ஏற்பட்டது.

முதல் சந்திப்பே இனிய சந்திப்பாக மலர்ந்தது.

பாவேந்தர் சற்று மௌனமாக இருந்து விட்டுப் பின் தொடர்ந்தார்.

"என் மனத்திலே நம்பிக்கை ஏற்பட்டுடுத்துன்னா அதை எக்காரணம் கொண்டும் மாற்றவே மாட்டேன். உன்னை முதல் முதல்ல பார்த்த உடனேயே ஏதோ ஓர் சக்தி என்னை ஈர்த்துடுச்சு. இதுதான் நீடித்துப் பழக அடிகோலிய உணர்வு."

நான் பதில் ஏதும் கூறாமல் மௌனமாக இருந்தேன்.

**உதவியாளன்**

பிறகு, அவர் இட்ட பணியைச் சிரமேற்கொண்டு அன்றாடம் அவர் குறிப்பறிந்து செயலாற்றி வந்தேன்.

அவர் என்னிடம் மிகுந்த அன்போடும், பாசத்தோடும் அதே நேரத்தில் மதிப்போடும் பழகினார்.

நான் அவரிடம் அவருடைய இலக்கியப் பணிக்கு உதவியாளனாக இருந்தேன். அவருடைய



கவிதைகள், கட்டுரைகள், நாடகங்கள் முதலியவற்றை அவர் சொல்லச் சொல்ல நான் எழுதியும், படி எடுத்தும் உதவி வந்தேன்.

தமிழ்வெறி காரணமாகவே நான் அவரிடம் தொண்டாற்ற அமைந்தது என்பதையும் சொல்லித்தானாக வேண்டும்.

தினமும் காலை எட்டு மணிக்கெல்லாம் அவர் வீடு செல்வேன். அவர் எப்போதெல்லாம் கவிதை, கட்டுரை, நாடகம் எழுதச் சொல்வாரோ அதற்கேற்ப நான் தயார் நிலையில் இருப்பேன். அவருடைய இலக்கியப்பணியைத் தொடங்குவேன்.

மதியம் மேற்கு மாம்பலத்திலிருந்த என் வீட்டிற்கு வந்து உணவு உண்டு மீண்டும் இரண்டு மணிக்கு அவர் வீடு செல்வேன். சில நேரங்களில் ஐந்து மணிக்கே என்னை வீட்டிற்குச் செல்ல அனுமதி தந்துவிடுவார். பகல் முழுதும் பாவேந்தர் அவர்கள் வீட்டில்தான் இருப்பேன். இரவு நேரங்களில் நான் செல்வதில்லை.

பத்திரிகைகளுக்கு வாழ்த்துக்கவிதை, பொங்கல் கவிதை என்று அவரவர் கேட்டதற்கிணங்க, கவிதை சொல்வார்; நான் அதை அப்படியே எழுதுவேன்; எழுதி முடித்த பிறகு அவற்றைப் படித்துக் காட்டு என்பார். படித்துக் காட்டுவேன்.

மனம் மகிழ்வார். உடன் கூறுவார்:

"நீ கவிதைகளையும், கட்டுரைகளையும், நாடகங்களையும் படிக்கிறதே ஓர் இன்பமா இருக்குப்பா. சொற்பிழை இல்லாமலும் வார்த்தைகள் உச்சரிப்பும், கணீரென்ற குரலும் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. அதிகமா சொன்னா கண்ணேறு பட்டுவிடும்" என்பார்.

**இதழ்களுக்குக் கவிதைகள்**

எழுதிய கவிதைகள், வாழ்த்துகளை அந்தந்த பத்திரிகைகளுக்குச் சென்று அதனதன் ஆசிரியர்களிடம் கொடுப்பேன். அவர்கள் கொடுக்கும் அன்பளிப்புத் தொகையை வாங்கி வந்து பாவேந்தரிடம் சேர்ப்பேன்.

சில பத்திரிகைகள் உடனேயே அன்பளிப்புத் தொகையினைக் கொடுத்து விடுவார்கள். சிலர் கவிதைகள் வெளியான பிறகு அனுப்புவார்கள். அதுவும் சிறிய தொகை மணிஆர்டரில் வரும்.

அந்த வகையில் அமுதசுரபிக்கும் ஓர் கவிதையை என்னிடம் 'திரு விக்கிரமனிடம் (அப்போது சு. வேம்பு), கொடுத்துவிட்டு சன்மானத்தையும் வாங்கிவா' என்று அனுப்பினார்.

நான் 'அமுதசுரபி' அலுவலகம் சென்றேன். ஆசிரியர் திரு. விக்கிரமன் அவர்களைப் பார்த்து



பாவேந்தர் அவர்கள் கொடுத்த கவிதையை அளித்து சன்மானம் வாங்கிவரச் சொன்னதாகவும் தெரிவித்தேன்.

அப்போது அமுதசுரபி பல இன்னல்களையும் இடர்ப் பாடுகளையும், சோதனைகளையும் எதிர்நோக்கி இருந்த காலக் கட்டம்.

அமுதசுரபியின் பொருளாதார நெருக்கடிபற்றி எனக்கு நன்றாகத் தெரியும். திரு. விக்கிரமன் அவர்களை இதற்குப் பல்லாண்டுகள் முன்பிருந்தே தெரியும்; நெருங்கிப் பழகியவர்.

இந்த நிலையில் விக்கிரமனும் வேண்டியவர்; பாவேந்தரின் கட்டளையையும் நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு.

இந்த இக்கட்டான நிலையில் சற்று நேரம் இருவரும் பேசாமல் மௌனமாயிருந்தோம்.

சற்றைக்கெல்லாம் மௌனத்தைக் கலைத்த விக்கிரமன் என்னிடம், 'சற்று நேரம் இங்கே அமர்ந்திருங்கள். இதோ வந்து விடுகிறேன்' என்று சொல்லிவிட்டு வெளியே சென்றார்.

சுமார் அரைமணி நேரம் கடந்திருக்கும். வியர்த்து விறுவிறுக்க விக்கிரமன் அவர்கள் அவசர அவசரமாக உள்ளே நுழைந்தார்.

"இந்தாருங்கள், இந்த சன்மானத்தைப் பாவேந்தர் அவர்களிடம் கொடுங்கள்" என்று என்னிடம் ஐம்பது ரூபாய்களைக் கொடுத்தார்.

எனக்கு வியப்பு மேலிட்டது! 'பொருளாதார நிலையில் மிகுந்த போராட்டத்தில் இருக்கும் பத்திரிகை அமுதசுரபி, பாவேந்தர் சன்மானமாக ரூபாய் ஐம்பதை எப்படிக் கொடுக்கமுடியும்?' என்ற ஐயப்பாட்டில் மூழ்கினேன்.



விக்கிரமன் பேசினார்:

'பாவேந்தரை நான் ஏமாற்றக் கூடாது. மற்ற பத்திரிகைகளைவிட அமுதசுரபி அதிகமான சன்மானம் கொடுத்த பெருமை அடையவேண்டும்.' அவர் வாயிலிருந்து வார்த்தைகள் மிகுந்த சிரமத்துடன் வெளிவந்தன.

பத்திரிகை நடத்துவதில் உள்ள சிரமங்களைத் திரு. விக்கிரமன் அவர்கள் என்னிடம் அடிக்கடி



கூறியிருக்கிறார். ஆனால் இன்று? அனுபவ ரீதியாகப் புரிந்துகொண்டேன்.

விக்கிரமன் அவர்களிடம் விடைபெற்றுப் பாவேந்தர் வீடுவந்து அவரிடம் அன்பளிப்புத் தொகையைக் கொடுத்தேன்.

**பத்திரிகை விற்பனை பற்றி**

இரண்டு கைகளையும் ஏந்திப் புன்முறுவல் பூக்க வாங்கிக்கொண்டவர்,

"ஐம்பது ரூபாயா?! வேம்புவா கொடுத்தார்?! ஊம்... இவ்வளவு பெரிய தொகையை வேம்பு எப்படிக் கொடுத்தார்?" என்று வியப்பு மேலிடக் கேட்டார்."

விவரமாகக் கூறினேன்.

"பாவம், பத்திரிகை நடத்துறது சும்மா இல்லே. பணவசதி இருந்தா தாங்கிக்கலாம். இல்லே, கடன்காரனுக்குப் பதில் சொல்லும்படியாத்தான் ஆகும். இதோபார்! குயில் பத்திரிகை குவிஞ்சு கிடக்கிறது. புத்தகமாகப் போட்டா வருடக்கணக்கானாலும் விலை போகும். பத்திரிகை அச்சடிச்சா, வித்தா சமாளிச்சுக்கலாம். இல்லே, பழைய பேப்பர்காரன்கிட்டே எடையிலேதான் போடணும்... ஊம்... பாவம்" என்று பத்திரிகை நடத்துவதன் உண்மையான இரகசியத்தை வெளியிட்டார்.

**கடிதம் தந்த மகிழ்ச்சி**

வழக்கம் போல் காலையில் பாவேந்தர் வீடு சென்றேன்.

பாவேந்தர் புறவீட்டின் திண்ணையில் சாய்ந்து படுத்தபடி தெருவையே பார்த்துக்கொண்டிருந்தார்.

நான் உள்ளே நுழைவதைப் பார்த்ததும் வழக்கமான புன்சிரிப்புடன், "புள்ளாண்டான் வரலியேன்னு இப்பத்தான் நினைச்சேன். நீ வந்திட்டே" என்று கூறி என்னை வரவேற்றுக் கையில் வைத்திருந்த ஒரு கடிதத்தை என்னிடம் நீட்டினார்.

நான் அதை வாங்கிப் படித்தேன். மகிழ்ச்சி கரை புரண்டது.

"ஐயா! உங்கள் எழுபத்தைந்தாம் வயது பிறந்தநாளில் வெள்ளி மகுடம் சூட்ட விருப்பதாக இலங்கைத் தமிழர்கள் விருப்பத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். மிக்க மகிழ்ச்சி ஐயா..!" என்று கூறி என் உள்ளப்பூரிப்பை வெளிப்படுத்தினேன்.

"சரி, ஐயா! எப்படிப் போகப் போகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"அதென்ன அப்படிக் கேட்டே? நாம் எப்படிச் சொல்லிப் போகிறோம்னு கேளு...." என்றார்.



"நாம் என்று சொல்லுகிறீர்களே? உங்களுடன் கூட யார் வரப்போகிறார்கள்...?" என்று கேள்வி கேட்டேன்.

"எங்கூட நீதான் வரணும். நாம விமானத்திலே தான் செல்லப்போகிறோம்... நீ சட்டை, துணிமணிகளைச் சலவை செய்து வச்சிக்க... ஆமாம்" என்றார்.

இலங்கையில் பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் எழுபத்தைந்தாவது பிறந்தநாள் விழாவில் அவருக்கு இலங்கைத் தமிழர்கள் வெள்ளி மகுடம் சூட்டும் நிகழ்ச்சியில் அவருடன் நானும் கலந்துகொள்ளப் பாவேந்தர் விரும்புகிறார் என்பதை எண்ணியபோது ஏற்பட்ட மகிழ்ச்சியை எழுத்தில் வடிக்க இயலாது. பூவோடு சேர்ந்து நாரும் பெருமை அடைகிறது என்று மனத்திற்குள் வியந்துகொண்டேன். இந்தச் செய்தியை என் வீட்டிலும் சொல்லிவிட்டு இலங்கைப் பயணம் குறித்த கனவில் மிதந்தேன்.

சில நாட்கள் சென்றன.

**அதிர்ச்சி தந்த அஞ்சல்**

ஓர் நாள் காலை. வழக்கம் போல் பணி தொடர பாவேந்தர் வீடு சென்றேன்.

என் வருகைக்காகக் காத்திருந்த பாவேந்தர் அவர்கள் என்னிடம் ஓர் கடிதத்தைக் கொடுத்தார். நான் அதை வாங்கி ஆவலோடு படிக்கப் பிரித்தேன்.

நெருப்பை மிதித்த உணர்வு ஏற்பட்டது.

என்னை நான் சமாளித்துக்கொண்டு கடிதம் முழுமையும் படித்து முடித்தேன்.

இப்போது நடைபெற்றுவரும் தமிழர் சிங்களவர் போராட்டம் 1964ஆம் ஆண்டிலேயே தொடங்கப்பட்டு விட்டது.

அதனால் முடிசூட்டுவிழா தேதி ஒத்திவைக்கப் பட்டிருப்பதான செய்தி அக்கடிதத்தில் கண்டிருந்தது.

இந்தச் செய்தி குறித்துப் பாவேந்தரவர்கள் எந்தவிதச் சலனமுமின்றி என்னைப் பார்த்தார்.

"என்ன?... கடிதாசியைப் படிச்சியா?" என்று சாதாரணமாகக் கேட்டார்.

என் கனவுக்-கோட்டை தகர்ந்து இடிந்து துகள் துகளாகிவிட்ட நிலையில் சற்று நேரம் மௌனமாக இருந்தேன்.

என் மௌனத்தைக் கலைத்தார் பாவேந்தர்.

"என்ன? ஒண்ணுமே பேசாம இருக்கியே? ஊம்" என்றார்.

சுய உணர்வு பெற்ற நான், "கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே என்றுதான்



வருத்தப்படுகிறேன்...'' என்று உற்சாகம் குறைந்து பதிலளித்தேன்.

வழக்கம் போல் 'பொள்'ளென்று சிரித்தார்.

நான், அவர் என்ன கூறப் போகிறார் என்று கூர்மையாகக் கவனித்தேன்.

''நீ ஒரு பச்சைப் புள்ளே! அனுபவம் இல்லே. இதெல்லாம் வாழ்க்கையிலே நடக்கிறது சகஜந்தான். இதுக்காக நீ ஏன் வருத்தப்படறே?'' என்று என்னைச் சமாதானப்படுத்தினார்.

அவருடைய மனப் பக்குவத்தை அப்போதுதான் நான் உணர்ந்துகொண்டேன்.

**பாராட்டும் பேருள்ளம்**

என்னைப் பாவேந்தர் அவர்கள் உதவியாளனாக ஏற்றுக் கொண்ட காரணத்தை அவரே என்னிடம் கூறினார்.

''நீ நல்லா எழுதறே. உன் எழுத்து பளிச்சினு அழகா இருக்கு. தெளிவா எழுதறே. பிழையில்லாமல், பாரா பிரித்து கோவையாக எழுதறே, நான் சொல்லாமலே நீயே பொருள் தெரிந்து பகுக்க வேண்டிய இடத்திலே பகுத்து, தொகுக்க வேண்டிய இடத்துலே தொகுத்து, கச்சிதமா எழுதறது எனக்கு

ரொம்பப் பிடிச்சிருக்கு...'' என்று கூறிப் பாராட்டுவார்; பெருமிதம் கொள்வார்.

அன்றாடம் அவரைப் பார்க்க வரும் முக்கியமான புள்ளிகளிடமும் என்னை அறிமுகப்படுத்தி, அவரது வெள்ளை உள்ளத்தை வெளிப்படுத்துவார்.

அத்துடனல்லாமல் என்னிடமும், 'யார் உன்னைக் கூப்பிட்டாலும் ஐயாவைக் கேட்டுக் கொண்டு வருகிறேன்' என்று சொல்லிவிடு; கூப்பிட்டாங்களேன்னு அவங்ககூட போயிடாதே'' என்று எனக்கு அறிவுரை கூறுவார்.

இப்படியாக நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன.

ஒரு நாள் வீட்டில் தங்கிவிட்டேன். பணிக்குச் செல்லவில்லை.

பாவேந்தர் அவர்கள் ஓர் ஆளை என் வீட்டிற்கு அனுப்பி, ''ஐயா உடனடியா உங்களை அழைச்சிட்டு வரச் சொன்னார். வாருங்கள்'' என்று அழைக்கவே நானும் அவருடன் பாவேந்தர் வீடு சென்றேன்.

என்னைப் பார்த்ததும் வழக்கம் போல் புன்சிரிப்பு மேலிட, ''என்ன? இன்னிக்கி விடுப்பு எடுத்திட்டியோன்னு நினைச்சேன்'' என்று கூறினார்.



"ஐயா! நாளைக்குப் பணிக்கு வரவேண்டாம்; எழுதுவதற்கு ஒண்ணுமில்லைன்னு நீங்கதானே சொன்னீங்க. அதனாலதான் வரவில்லை" என்று பதிலளித்தேன்.

"ஆமாம், ஆமாம்! நான்தான் வரவேண்டாம்னு சொன்னேன். அத மறந்துட்டேன்" என்று சமாதானமாக மொழிந்தார்.

பிறகு தொடர்ந்தார்:

**ஒரு நண்பரிடம்**

"உன்னை ஒருநாள் பார்க்கலேன்னா மனசு கேட்கல்லே. பார்க்கத் துடிக்குது. அதனால்தான் உன்னை அழைத்து வர ஆள் அனுப்பினேன்" என்றார்.

"வந்ததுதான் வந்தே, ஒரு வேலை செய். நீ தாம்பரம் போ. அங்கே கூட்டுறவு அர்பன் வங்கிச் செயலாளர் இராசரத்தின முதலியாரைப் பார்த்து ஒரு வீசை காபிக்கொட்டை, அரை மூட்டை புழுங்கல் அரிசி - ஐயா வாங்கிவரச் சொன்னார்னு சொல்லு. அவர் வாங்கித் தருவார், உம். இந்தா, இருநூறு ரூபாய் கையிலே வச்சுக்க..." என்று சொல்லிக் கொடுத்தார்.

நானும் அதை வாங்கிக் கொண்டு தாம்பரம் சென்று அவர் கூறியபடி திரு. இராசரத்தின முதலியாரைச் சந்தித்து வந்த விவரம் கூறினேன்.

அவரும் என்னை அன்போடு வரவேற்று அமரச் செய்து பாவேந்தர் அவர்களைப் பற்றி மிக உயர்வாகப் பேசிக்கொண்டிருந்தார்.

அவர் கூறிய செய்தியில் ஒன்று.

**தவிக்க வைத்தவர்கள்**

ஒரு சமயம் சில அன்பர்கள் பாவேந்தரை ஒரு நாடக நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கி வாழ்த்துரை வழங்க அழைத்திருந்தனர். பாவேந்தரும் அதற்கு இசைந்தார்.

நாடக அழைப்பிதழைக் கொடுக்க அதனை ஏற்பாடு செய்தவர்கள் நேரில் வந்து கொடுத்துவிட்டுச் சென்றார்கள்.

குறித்த நாளும் வந்தது.

பாவேந்தர் அவர்கள் தம் துணைவியார் பழனி அம்மாளுடன் நாடகம் நடக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தார்.

நாடகம் தொடங்கியது.

இடைவேளையின்போது பாராட்டு விழா! பாவேந்தர் அவர்கள் தலைமை ஏற்று நாடக நடிகர்களைப் பாராட்டிப் பேசினார்.



நாடகம் முடிய இரவு ஒரு மணி ஆகிவிட்டது. நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர்கள் நழுவி விட்டார்கள். வேடங்களைக் கலைத்துக் கொண்டு நடிகர்கள் மட்டுமே இருந்தார்கள்.

வீடு திரும்ப வாகன வசதி செய்து தர ஆட்களில்லை. பாவேந்தருக்கு மிகுந்த கோபம் வந்து விட்டது.

"அழைச்ச பசங்க. கம்பியை நீட்டிட்டானுங்க. ஆட வந்த பசங்க என்ன பண்ணுவாங்க. தமிழன்னு சொல்லிக்கவே வெட்கமால்ல இருக்கு. ஏமாத்தற புத்திதான் தமிழனுக்குன்னு உலகம் சிரிக்கும்ல..." என்று கோபத்திலும் பண்பு கெடாமல் பேசினார்.

அவர் துணைவியார் நள்ளிரவு நேரத்தில் எங்கே போவது என்று விழித்துக்கொண்டிருந்தார்.

**உற்ற நேரத்தில் உதவியவர்**

"இரவு ஒரு மணி ஆயிடுத்து, ஐயா இன்னும் வரலியேன்னு கவலைப்பட்டுட்டு உடனே காரை எடுத்துக்கொண்டு நாடகம் நடந்த இடத்திற்கு விரைந்தேன்.

"என்னைக் கண்டதும் அவருக்கும், அவர் துணைவியாருக்கும் நம்பிக்கை உண்டாயிற்று."

'நல்ல வேளைக்கு நீ வந்தேப்பா.. நீ வரலேன்னா முகம் தெரியாத இந்த இடத்திலே நடுநிசியிலே எங்கே போறதுன்னு தடுமாறிகிட்டிருந்தோம். கார் கொண்டாந்திருக்கியா' என்றார்.

நானும், "காரில்தான் வந்திருக்கேன்யா. கிளம்புங்க! அம்மா. வண்டிலே ஏறுங்க" என்று கூறிக் காரிலேற்றி என் வீடு வந்தேன்.

"அந்த நள்ளிரவு நேரத்தில் அவர்களுக்குச் சப்பாத்தியும் குருமாவும் செய்து கொடுத்து பசியாற்றினோம்."

"இரவு என் வீட்டிலேயே தங்க வைத்து மறு நாள் காலையில் காரில் அவர் வீட்டிற்கு அனுப்பி வைத்தேன். அதை நினைத்தால் இப்போதுகூட வியப்பாக இருக்கிறது" என்று கூறி முடித்தார்.

என்னிடம் ஒரு வீசை காபிக் கொட்டையும், அரை மூட்டைப் புழுங்கல் அரிசியும் வாங்கிக் கொடுத்தார்.

காபிக்கொட்டையும், புழுங்கல் அரிசியும் தட்டுப்பாடு உள்ள காலம்.

என் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் பாவேந்தர் அவர்கள்.



இளநகை பூத்து என்னை வரவேற்றார். நான் மூட்டை, முடிச்சுகளை உள்ளே சென்று வைத்தேன்.

''என்ன? போன வேலை வெற்றிதான்னு சொல்லு!'' என்று கூறிச் சிரித்தார்.

''வெற்றிதான்யா'' என்று 'கண்டேன் சீதையை' என்று இராமபிரானிடம் அனுமன் மங்கலச் செய்தியை முதலில் தெரிவித்தது போல் மொழிந்தேன்.

படுத்திருந்தவர் மகிழ்ச்சி பொங்க் எழுந்து உட்கார்ந்தார்.

**திரு. இராசரத்தினம் பற்றி**

''இராசரத்தினம் என்ன சொன்னார்? ஏதாவது தகவல் சொல்லச் சொன்னாரா...?'' என்று கேட்டார்.

நான் சென்று இராசரத்தின முதலியாரைச் சந்தித்தது முதல் அவர் கூறிய நிகழ்ச்சியையும் ஆதியோடு அந்தமாகத் தெரிவித்தேன்.

''ஆமாம் ஆமாம். அது ஒரு பெரிய கதை! நாடகத்திற்கு அழைச்சவங்க நாடகம் முடிஞ்சப்போ அம்போன்னு விட்டுட்டாங்க. முகம் தெரியாத இடத்திலே, நள்ளிரவு நேரத்திலே, எங்கே போறது? தவியாய்த் தவிச்சோம். நல்ல வேளையா முதலியார் வந்து எங்களை அழைச்சிட்டுப் போனாரு'' என்று கூறி விடாமல் சிரித்தார்.

“இராசரத்தினம் உண்மையிலேயே உயர்ந்தவர். பழகுவதிலும் அன்பாகப் பேசுவதிலும் வந்தவங்களை வரவேற்று உபசரிப்பதிலும் கைதேர்ந்தவர். பாதி ராத்திரியிலே தவிச்சப்போ அவரு எங்களை அழைச்சிட்டு வந்து அவர் வீட்டிலே சப்பாத்தியும் குருமாவும் தயார் செய்து சாப்பிட வச்சாங்க. இரவு அவர், படுக்கை, தலையணை, போர்வை கொடுத்து, ‘படுத்து நல்லா தூங்குங்க. காலையிலே வீட்டுக்குப் போகலாம்’னு சொன்னதும் நான் அந்த வார்த்தையைத் தட்ட முடியாம தங்கிட்டேன். என் வீட்ல கூட அவ்வளவு சலுகை இருக்காது. அவரு அவ்வளவு பார்த்துப் பார்த்து உபசாரம் செய்தாரு. இதை நினைக்கிறப்போ,

**இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு**

என்ற குறளடிகள்தான் ஞாபகத்திற்கு வருது” என்று விருந்தோம்பும் பண்பு பற்றி விளக்கினார்.

**விருந்தினர் மகிழ**

பாவேந்தர் அவர்கள் வீட்டிற்குத் தினமும் இரண்டு பேர்களாவது உணவு உண்ண வருவார்கள். வருகிறவர்களை இன்முகத்துடன் வரவேற்று அமர வைத்து குடும்பநலம் விசாரித்து, வாழை இலையில் அவர்களுக்கு உணவு பரிமாறும் அவர் துணைவியார் பழனியம்மாளுக்கு உதவியாகத் தானும் பரிமாறுவார்.



மோப்பக் குழையும் அனிச்சம்; முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து

என்ற திருவள்ளுவரின் சொல்லோவியத்திற்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர் புரட்சிக் கவிஞர் அவர்கள்.

பாவேந்தர் அவர்கள் காபிக் கொட்டையும், புழுங்கல் அரிசியும் வாங்கக் கொடுத்த இருநூறு ரூபாயில் அவற்றிற்குண்டான பட்டியலில் உள்ள தொகை போக மீதமுள்ள தொகையை அவரிடம் கொடுத்தேன்.

'என்ன இது?!' என்ற பாவனையில் கையில் தொகையை வாங்கியவர் என் முகத்தைப் பார்த்தார்.

"நீங்கள் கொடுத்த இருநூறு ரூபாயில் காபிக்கொட்டை, புழுங்கல் அரிசிக்குண்டான பட்டியலில் உள்ள தொகை போக மீதமுள்ள தொகை ஐயா" என்றேன்.

"கொடுத்த பணத்திற்குக் கணக்குச் சொல்லி சரிகட்டிடுவாங்க எல்லோரும். நீ என்னடான்னா மீதி தொகைன்னு கொடுக்கிறே! இது அதிசயமா இருக்கேன்னுதான் கேட்டேன்" என்று உலகாயதம் விளக்கினார்.

"உலகத்தை நீயும் புரிஞ்சு கொள்ளணும்பா" என்று அறிவுரை வழங்குவார்.

**நாயுள்ளம்**

ஒரு சமயம் முற்பகல் நேரம். பாவேந்தரின் நூல் ஒன்றை படி எடுக்குமாறு கூறவே அதில் ஈடுபட்டிருந்தேன். தொடர்ந்து எழுத விடமாட்டார். நடுநடுவே ஓய்வு கொடுத்து சிலசுவையான செய்திகளைக் கூறி உற்சாகப்படுத்துவார்.

உட்கார்ந்திருந்தவர் எழுந்து உள்ளே சென்று கம்பு தானியத்தை எடுத்து வந்து அங்குமிங்கும் ஓடித் திரியும் கோழிக்குஞ்சுகளுக்கு வாரி இறைத்து உள்ளம் மகிழ்வார். அவை அவற்றைத் தின்பதையே பார்த்து ரசிப்பார். மகிழ்வார்.

எழுதிக் கொண்டிருந்தவனைச் சற்று நிறுத்துமாறு கையமர்த்தி சைகை காட்டினார். நான் எழுதுவதை நிறுத்திவிட்டு அவர் சொல்லப் போகும் செய்தியைக் கேட்க என் காதுகளைத் தீட்டிக் கொண்டேன்.

“எனக்கு கோழிக்கறி, மீன் குழம்பு பிடிக்கும்பா” என்று கூறிவிட்டுச் சிரித்தார்.

“உங்க வீட்லதான் நிறைய கோழிங்க இருக்குதே. தினமும் ஒண்ணா சமைச்சு சாப்பிடறதுதானே” என்று நகைச்சுவைக்காகக் கூறினேன்.

மீண்டும் சிரித்துவிட்டு, “போப்பா, நீயொரண்ட, இதுகளை நான் பெத்த புள்ளையாட்டமா வளர்க்கறேன்.



அதைப் போய் சாப்பிடுன்னு சொல்றியே. ஊஹூம், மாட்டவே மாட்டேன். கடையிலே போயி வாங்கியாந்து சாப்பிடுவேனே தவிர இதுங்களைத் தொட மாட்டேன்'' என்று விளக்கம் கூறினார்.

**அன்பு ஈனும் ஆர்வம்உடைமை; அதுஈனும்**
**நண்புஎன்னும் நாடாச் சிறப்பு**

என்ற வள்ளுவரின் குறளடிகள்தாம் என் நினைவிற்கு வந்தன. கோழிக் குஞ்சுகளிடம்கூட எவ்வளவு அன்போடும் பாசத்தோடும் நேசத்தோடும் பழகுகிறார் என்பதை நான் அவரிடம் பழகிய காரணத்தால் அனுபவரீதியாகத் தெரிந்துகொண்டேன்.

இப்படி அன்றாடம் அவர் புதுப்புது செய்திகளை வாழ்க்கையொட்டிய நிகழ்ச்சிகளோடு கலந்து சொல்வதை எண்ணி எண்ணி இன்றும் வியப்படைகிறேன்.

அவர் வீட்டில் ஒரு சேவல் இருந்தது. நான் எழுதிக்கொண்டிருக்கும் போதெல்லாம் குறுக்கும் நெடுக்கும் ஓடித் திரியும். அது குனிந்து பார்த்ததே இல்லை! ராஜநடை! அடியெடுத்து வைப்பதே அலாதியான அழகு, நேரான பார்வை, துடிப்பான நடை, சுறுசுறுப்பான இயக்கம்.

**முடிதிருத்தும் இடத்தில்**

பாவேந்தரிடமும் இதே நடை, கம்பீரம், நிமிர்ந்த நோக்கு, அளவொத்த காலடிகள்!... நான் பார்த்து ரசித்ததுண்டு.

ஒருமுறை முடி வெட்டிக் கொள்ள முடி திருத்தகம் சென்றார் பாவேந்தர். முடி வெட்டிக் கொண்டவுடன் வழக்கமாக அவர் கொடுக்கும் கட்டணத்தைக் கொடுத்தார். முடிவெட்டியவர் அதை வாங்க மறுத்து அவரிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார். மேலும் ஒரு ரூபாய் கொடுத்தால்தான் வாங்குவேன் என்று கூறினார்.

"வழக்கமாக இந்தத் தொகைதான் கொடுக்கிறேன்; இதற்குமேல் தரமுடியாது" என்று பாவேந்தர் பதிலளித்தார். இருவருக்கும் வாக்குவாதம் உண்டாயிற்று.

இடையில் ஓர் அன்பர் உள்ளே நுழைந்து அங்கே பாவேந்தர் இருப்பதைக் கண்டார். ஆர்வத்தோடு மிகுந்த மரியாதையுடன் கையெடுத்துக் கும்பிட்டார். முடி வெட்டியவர் வெலவெலத்துப் போனார்.

முடிவெட்டியவருக்குப் பாவேந்தர் பேரில் மிகுந்த ஈடுபாடு உண்டு. ஆனால் அவரை நேரில்

பார்த்தது கிடையாது. அடுத்த கணம் இரண்டு ஆரஞ்சுப் பழங்களையும், ஒரு பொட்டணம் காரா சேவையும் வாங்கிக் கொண்டு உள்ளே நுழைந்த அவர், தட்டில் அவைகளை வைத்து மேலே பத்து ரூபாய் நோட்டையும் வைத்துப் பாவேந்தரிடம் கொடுத்துவிட்டு நெடுஞ்சாண் கிடையாக அவர் கால்களில் விழுந்தார்.

"தெரியாமல் செய்த தவறை மன்னியுங்கள் ஐயா" என்று கண்களில் நீர்மல்கப் பாவேந்தரிடம் மன்னிப்பும் கோரினார்.

இச்செய்தியைப் பாவேந்தரே என்னிடம் சொல்லிவிட்டுக் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்.

இதைக் கேட்ட எனக்கு வியப்பாக இருந்தது. அவர் சிரிப்பில் நானும் கலந்துகொண்டேன்.

ஒருநாள் மாலைப் பொழுது, நான்கு மணியிருக்கும். நான் படி எடுத்துக்கொண்டிருந்தேன்.

கையமர்த்தி என்னை எழுதுவதை நிறுத்தும்படி கூறினார். நானும் தாள்களைச் சீராக்கிப் பக்கம் பார்த்து ஒழுங்குப்படுத்தி அடுக்கி அலமாரியில் கொண்டுபோய் வைத்தேன்.

**கடற்கரை நோக்கி**

இதற்குள் பாவேந்தர் அவர்கள் வெளியே கிளம்பத் தயாராகிவிட்டார்.

“பழனியம்மா! புள்ளாண்டானும் நானும் திருவல்லிக்கேணி கடற்கரை போய்விட்டுக் கொஞ்சநேரம் இருந்திட்டு வர்றோம். யாராவது வந்தா கடிதாசில குறிச்சு வைச்சிட்டுப் போகச் சொல்லு” என்று கூறிவிட்டு,

“புறப்படலாமா? கடற்கரைக் காற்று வாங்கிட்டு வரலாம் வா” என்றவர் வீட்டை விட்டு வெளியே நடக்கலானார். அவருடன் நானும் தொடர்ந்தேன்.

தியாகராய நகர் பாண்டி பஜார் சென்று ஓர் ஆட்டோ ரிக்ஷா பிடித்து, திருவல்லிக்கேணி விவேகானந்தர் இல்லம் சென்று இறங்கினோம். (அப்போது ஐஸ்அவுஸ் என்று பெயர் )

கடற்கரைச் சாலையின் ஓரமாக அமைந்த புல்தரையில் நடந்தோம்.

ஓரிடத்தில் நின்றார். பின் கையைக் காட்டி, “அதோ, அங்கே போய் உட்காரலாம் வா” என்றவர் நடந்தார்.

ஓர் குறிப்பிட்ட இடத்தில் புல்தரையில் இருவரும் அமர்ந்தோம். கவிஞர் சுற்று முற்றும் பார்த்தார். கடலையும் வானத்தையும் பார்த்தார்.

பேச ஆரம்பித்தார்:

**புதியபாதை! புதியநடை**

"கடலுக்குக் கூட ஆழம் கண்டுபிடிச்சிடலாம். ஆனால் தமிழுக்கு ஆழம் எவனாலும் கண்டுபிடிக்க முடியாது. ஐயருக்கு முன்னே இருந்தவங்க கரடு முரடான தமிழ் நடையைப் பின் பற்றிச் செய்யுள் செய்தாங்க. பாமர மக்களுக்கு ஒண்ணும் பயன்படல்லே. அவங்களுக்கு மொழியின் சிறப்பை விளங்க வைக்கணும்னா செய்யுள் நடையை எளிமையாக்கினாத்தான் முடியும்கிறத ஐயர் நல்லா புரிஞ்சிட்டாரு. பண்டித நடையைவிட்டுப் பாமரனுக்கும் புரியும்படியா எளிமையான சொற்களிலே செய்யுள் அமைத்தால்தான் எல்லாருக்கும் மொழி பயன்படும் என்று புதிய பாதையைக் காட்டினார். அவருக்குச் சூழ்நிலையும் சாதகமாக அமைந்தது."

இடையிடையே 'என்ன, புரியுதா?' என்று என்னிடம் கேட்பார்.

"உம், சொல்லுங்க" என்பேன்.

**பாடிக்காட்டிய பாவேந்தர்**

தொடர்வார்:

"அன்னியனுக்கு அடிமையாய் இருந்த காலம். வெள்ளைக்காரனக் கண்டா 'துரை'ன்னு சொல்லி, சலாம் போட்ட காலம்! இன்னும் சொல்லப் போனா 'போலீஸ்காரன கண்டா வீட்டுக்குள்ளேயே பதுங்கி பயப்பட்ட காலம். இதையெல்லாம் பார்த்தார் பாரதி. நெஞ்சு பதைத்தது, பாடலாக வெடித்தது."

**நெஞ்சு பொறுக்குதில்லையே - இந்த**
**நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்**
**அஞ்சியஞ்சிச் சாவார் - இவர்**
**அஞ்சாத பொருளில்லை அவனியிலே**
**சிப்பாயைக் கண்டு அஞ்சுவார் - ஊர்**
**சேவகன் வருதல் கண்டு மனம் பதைப்பார்**
**துப்பாக்கி கொண்டொருவன் - வெகு**
**தூரத்தில் வரக்கண்டு வீட்டிலொளிவார்.**

என்னும் பாடலைச் சிங்கம் கர்ஜிப்பது போல் கணீரென்று பாடிவிட்டு ஓர் சிலிர்ப்பு சிலிர்ப்பார். அப்பப்பா!

அந்தச் செய்யுளின் பொருளும், சொற்சுத்தமும் அழுத்தமாகப் பாடும் காம்பீரியமும் இப்போது நினைத்துப் பார்க்கிறேன்; என் மெய் சிலிர்க்கிறது.

பாரதியிடம் பாவேந்தர் கொண்ட பக்தியும் மரியாதையும் சொல்லுதற்கரிது. அப்படிப்பட்ட குரு விசுவாசம்.



ஒரு நாள் காலைநேரம்; நான் அவர் வீட்டில் நுழைந்தேன். என் இருக்கையில் அமர்ந்தேன், அன்றைய பணிக்குத் தேவையான தாள்களுடன் படி எடுக்க வேண்டிய பகுதிகளைப் பிரித்து வைத்துக்கொண்டேன்.

"அதை அப்படியே வை, என் கூட வா" என்றார்.

நானும் அவற்றை ஒழுங்குபடுத்தி வைத்துவிட்டு அவருடன் கிளம்பினேன்.

**கொத்தவால் சாவடி நோக்கி**

எப்போதும் போல் பாண்டி புஜார் ராஜகுமாரி தியேட்டர் (இப்போது அது இல்லை) வாசலில் ஆட்டோ பிடித்தோம். ஏறி அமர்ந்ததும் பேச ஆரம்பித்தார்.

"கிழங்கு சமாச்சாரமெல்லாம் உதவாதுன்னு டாக்டர் சொல்லிட்டாருப்பா. பச்சைக் காய்கறி, நிலத்திற்கு மேல் விளையும் கீரை, காய்கறிகளைத்தான் உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும்கிறாங்க, அதனாலதான் காய்கறி வாங்கி வரக் கொத்தவால் சாவடிக்குப் புறப்பட்டேன். நீ காய்கறி நல்லா பார்த்து வாங்குவே. அதனாலதான் என்னோடு உன்னையும் அழைச்சிட்டு வந்தேன்."

அவர் பேச்சைக் கேட்டு ஆமோதிக்கும் பாவனையில் ‘உம்’ போட்டுத் தலையை மட்டும் ஆட்டினேன்.

ஆட்டோ கொத்தவால் சாவடியை நெருங்கியது. நாங்கள் இருவரும் இறங்கி நடந்தோம். பின் கொத்தவால் சாவடிக்குள் நுழைந்தோம். வரிசை வரிசையாகக் காய்கறிகள் பிரிக்கப்பட்டுக் குவியலாக வைக்கப்பட்டுக் காட்சியளித்தன.

எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே வந்தார். கீரை வகைகளில் சில, முட்டைகோஸ், பச்சை பட்டாணி, முருங்கைக்காய், அவரைக்காய், வெண்டைக்காய், பச்சைமிளகாய், கொத்துமல்லிக்கீரை, கறிவேப்பிலை ஆகியவற்றை வாங்கிக்கொண்டோம்.

மீண்டும் சைனாபஜார் (நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் சாலை) வந்து ஆட்டோ பிடித்து வீடு வந்து சேர்ந்தோம்.

மூட்டையை இறக்கியதும் இறக்காததுமாய், “பழனியம்மா! இத்தனையையும் புள்ளாண்டான்தான் நல்லாருக்கான்னு பார்த்து வாங்கினான். வந்து பார்” என்று துணைவியாரிடம் சொல்லி மகிழ்ந்தார்.

என்னைப் புகழ்ந்து பேசினார் என்பதற்காகக் கூறவில்லை. அவருடைய வெள்ளை உள்ளத்தின் சிறப்பை எடுத்துக் கூறவே இங்குக் குறிப்பிடுகிறேன்.



**சிலம்புச் செல்வருக்கு விழா**

சிலம்புச் செல்வர் ம.பொ.சி.யின் பிறந்தநாள் விழா சென்னை கோகலே மன்றத்தில் கொண்டாடப்பட்டது. அந்த விழாவில் பாவேந்தர் அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

நிகழ்ச்சியில் கவி.கா.மு.ஷெரீப், டி.கே. சண்முகம், கம்யூனிஸ்ட் தலைவர்களில் ஒருவரான ஏ.எஸ்.கே. ஐயங்கார், சின்ன அண்ணாமலை, ஜி. உமாபதி, வழக்கறிஞர் எஸ்.கே. பாலசுப்பிரமணியம் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

ஏ.எஸ்.கே. ஐயங்காரும், சின்ன அண்ணாமலையும் ம.பொ.சி.யின் மீசை நரைத்துவிட்டது; ஆனால் தலைமயிர் நரைக்கவில்லை என்று நகைச்சுவை ததும்பக் குறிப்பிட்டார்கள்.

**பாவேந்தரின் பாராட்டுரை**

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டு கவிஞர் தலைமை உரையில் கூறினார்:

"இங்குப் பேசியவர்கள் ம.பொ.சி.யின் மீசை நரைத்துவிட்டது என்றும் தலைமயிர் நரைக்கவில்லையென்றும் நகைச்சுவைக்காகக் கூறினார்கள். உண்மைதான்.

“ம.பொ.சி. ஒழுக்கத்தோடு வாழ்பவர். அதனால்தான் அவர் தலைமயிர் வெளுக்கவில்லை. வாழ்க்கையில் ஒழுக்கத்தோடு வாழ்பவன் நீண்ட நாள் வாழ்வான்.”

“இந்தச் செய்தியை நான் புதிதாகச் சொல்லவில்லை; இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே தமிழ்மறை தந்த வள்ளுவப் பெருந்தகை,

**பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார்**

என்று வாழ்த்திவிட்டார்” என்று விளக்கம் தந்ததும் கூடியிருந்த கோகலே மண்டபமே அதிரும்படியாகக் கைதட்டல் ஒலி எழுந்தது. பாவேந்தர் அவர்கள் கை அமர்த்திவிட்டுத் தொடர்ந்தார்.

ம.பொ.சி. அவர்கள் வாழ்க்கையில் ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பவர்; அதனால்தான் அவர் தலைமுடி கருகருவென்றிருக்கிறது. அந்த ஒழுக்கமே அவரை நீண்ட நாள் வாழச் செய்யும் என்பதை வள்ளுவரே சொல்லிவிட்ட பிறகு பிறிதொரு வாழ்த்தும் தேவையில்லை.

“வயதில் மூத்தவன் என்ற வகையிலும், ஓர் தமிழனை இன்னோர் தமிழன் வாழ்த்துவதே மரபு என்பதாலும் வாழ்த்தக் கடமைப்பட்டிக்கிறேன். அவர்



நீடு வாழ்வார்!" என்று கூறித் தலைமையுரையை முடித்தார்.

**கவலையில் கவிவேந்தர்**

ஒரு சமயம் வருமான வரித் துறையிலிருந்து ஒரு கடிதம் வந்தது. பதினைந்து நாட்களுக்குள் வருமானக் கணக்கைச் காண்பிக்க வேண்டும் என்னும் நிபந்தனை.

பாவேந்தர் முகத்தில் கவலைக்குறி தென்பட்டது. மற்றொரு பக்கம் அளவு கடந்த கோபம். இங்குமங்கும் பின்புறம் கைகளைக் கட்டியபடி உலவினார்.

இந்த நேரத்தில் பாவேந்தரிடம் நெருங்கிப் பழகிய கவிஞர் நாக. முத்தையா என்பவர் வந்தார். வந்தவரை வரவேற்றார். பின் விவரம் தெரிவித்தார். அவர் பதில் ஏதும் சொல்லாமல் நின்றுகொண்டிருந்தார்.

இடையில் திருமலை நடராசன் என்பவர் வந்தார். பாவேந்தர் கவலையில் இருப்பதைப் புரிந்து கொண்டார். சற்றைக்கெல்லாம் அவரையே கேட்டுவிட்டார்.

"இந்த வருமானவரிக்காரனுங்க நோட்டீஸ் அனுப்பி இருக்கான். என்னோட வருமானக் கணக்கை இன்னும் பதினைந்து நாள்ல ஒப்படைக்கணும்னு.

அதைப்பற்றித்தான் யோசிச்சிட்டிருக்கிறேன்'' என்று கூறினார்.

உடனே திருமலை நடராசன், ''ஏன்யா கவலைப்படறீங்க? நான் அதற்கு ஏற்பாடு செய்துட்றேன்'' என்று உற்சாகத்தோடு பேசினார்.

''நீ இந்த வேலையை முடிச்சுக் குடுத்துடுவியா? உன்னால முடியுமா? நான் கேட்பதற்காக பந்தா காட்டிப் பேசுறியா...'' என்றார்.

''அப்படியெல்லாம் இல்லை ஐயா. உண்மையாகத்தான் சொல்கிறேன். சொன்னது உறுதிதான்'' என்று நம்பிக்கை கலந்து பேசினார்.

''பார்க்கலாம்... நீ சொல்றத நான் நம்பறேன்...'' என்று தணிந்த குரலில் கூறினார்.

திருமலை நடராசன் விடைபெற்றுச் சென்றுவிட்டார்.

நாட்கள் ஓடின. பத்துநாட்கள் கழிந்துவிட்டன.

பாவேந்தர் மனம் எதிலும் ஈடுபடாமல் கலக்கமாகவே இருந்தது.

இந்த நிலையில் திடீரென்று திருமலை நடராசன் உள்ளே நுழைந்தார். கணக்குப் புத்தகங்களை அடுக்கி வைத்தார். இதைப் பாவேந்தர் பார்த்தார்.



"ஐயா! இதோ கணக்கு ரெடி! இன்றே ஒப்படைத்து விடலாம்" என்றார்.

"என்னூர்க்காரன். எனக்காக நீ உதவிட்டே" என்று வியப்பில் நன்றி கலந்து பேசினார்.

இந்த நிகழ்ச்சிகள் பாவேந்தர் சொல்லக் கேட்டதை, இங்கே எழுத்து வடிவம் கொடுத்துள்ளேன். இதில் என் கற்பனைக் கலப்பு ஏதுமில்லை.

1962ஆம் ஆண்டு என்று பாவேந்தர் அவர்கள் கூறியதாக நினைவு.

**பாவேந்தரின் பரிவும் பதைப்பும்**

"பங்களூரில் இசைப்பேரரசி எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்களின் இசைக் கச்சேரி ஒன்று ஏற்பாடாகியிருந்தது. அங்குள்ள கன்னடர்கள் கலாட்டா செய்து 'தமிழச்சி பாடக்கூடாது' என்று கூக்குரலிட்டு அமளி துமளி செய்திருக்கிறார்கள். இவங்களைச் சும்மா விடலாமா? இந்த ஊர்ல எத்தனை கன்னடக்காரங்க இருக்காங்க? சினிமாத்துறையிலே சரோஜாதேவி, பி.ஆர்.பந்துலு போன்றவங்க இருக்காங்கள்ல. அவங்களை ஊரை விட்டு நாம துரத்த முடியாதா? இந்த கன்னடப்பசங்க வாலை ஆட்றாங்களே. முதல்லே இதற்குக் கண்டனம் தெரிவிக்கணும். ஆமாம்" என்று படபடவென்று பேசினார்.

திருமலை நடராசனும் அதற்கு வருத்தம் தெரிவித்ததுடன், “கண்டனக் கூட்டம் போட்டு நம் எதிர்ப்பைக் காட்டுவோம்” என்று வீரமாகப் பேசினார்.

பேச்சளவில் இல்லாமல் தியாகராய நகர் வாணிமகாலில் புரட்சிக்கவிஞர் தலைமையில் கவிஞர் பொன்னடியான், திருமலை நடராசன், கவிஞர் தஞ்சைவாணன் இன்னும் பலர் மேடையில் முழக்கமிட்டனர்.

கர்நாடக அரசுக்கே கண்டனத் தீர்மானத்தை அனுப்பினார்கள். தமிழ்நாடு அரசுக்கும் நகலை அனுப்பியதாக நினைவு.

“திருமலை நடராசன்! சித்தவைத்திய நூல்களைப் பொதுமக்கள் புரிந்துகொள்ளும் அளவிற்கு, தமிழர்கள் மருத்துவத்தில் சிறந்து விளங்கியதை வெளிப்படுத்த வேண்டும். அதற்கு நீதான் முனைந்து செய்யணும்” என்றும் கேட்டுக்கொண்டார்.

இந்த நிகழ்ச்சியைத் திருமலை நடராசன் அவர்களே என்னிடம் தெரிவித்தார்கள். திருமலை நடராசன் அவர்கள் தந்தையாரும், பாவேந்தரும் மிக நெருங்கிய நண்பர்கள் என்ற தகவலையும் என்னிடம் கூறினார்.



பாவேந்தரே என்னிடம் இதைப்பற்றிக் கூறியிருக்கிறார்கள் என்று நான் அவரிடம் தெரிவித்தேன்.

ஒருநாள் காலை நேரம். நான் பாவேந்தர் வீட்டில் இருந்தேன். பணி தொடங்கவில்லை.

**வருமான வரித்துறைக்கு ரசீது**

பாவேந்தர் அவர்கள் உள்ளே ஏதோ தேடிக் கொண்டிருந்தார். அரை மணிநேரம் பெட்டி, அலமாரி என்று எல்லா இடத்திலும் அவர் கைகள் பரபரத்தன.

தேடிய காகிதம் கிடைத்துவிட்டது. அதைப் பிரித்துப் படித்துப் பார்த்தார். என்னிடமும் அதைக் காண்பித்தார். வருமானவரித் துறையிலிருந்து வந்த கடிதம், பாவேந்தர் அவர்கள், பாண்டியன் பரிசு பட சம்பந்தமாக மோட்டார் வாகனம் (Van) ஓர் மார்வாடி நிறுவனத்தில் அடமானம் வைக்கப்பட்டது. அந்த இரசீதை வருமானவரித் துறையினர் கேட்டிருந்தனர். அதை வாங்கி வர வேண்டும் என்பதனை என்னிடம் தெரிவித்தார்.

உடனே ஓர் ஆட்டோ பிடித்து தங்கசாலைத் தெரு சென்று அந்தக் குறிப்பிட்ட மார்வாடி நிறுவனத்திற்குள் நுழைந்து அவர்களிடம் வந்த விவரம் கூறினோம்.

சுமார் நாற்பத்தைந்து நிமிடங்கள் காத்திருந்தோம். அதன் பின்னர் நாங்கள் கேட்ட இரசீதின் நகல் கிடைத்தது. அதை வாங்கிக்கொண்டு வீடு திரும்பினோம்.

**நாள்தோறும் மருந்தூசி**

பாவேந்தர் அவர்களுக்கு சர்க்கரை நோய் இருந்தது. தியாகராய நகர் தணிகாசலம் செட்டித் தெருவிலிருந்த டாக்டர் சாரி என்பவர்தான் அவருடைய குடும்ப டாக்டர். அவர்தான் பாவேந்தருக்கு சிகிச்சையளித்து வந்தார்.

தினமும் அவருடைய கம்பவுண்டர் (ஓர் ஐயங்கார்) பாவேந்தர் வீட்டிற்கு வந்து இன்சுலின் போட்டுவிட்டுப் போவார்.

சில நாட்களில் குறிப்பிட்ட நேரத்தில் வரும் கம்பவுண்டர் வரத் தாமதம் ஆகும்.

திண்ணையில் சாய்வாகப் படுத்திருப்பவர் தெருவைப் பார்த்துவிட்டு,

"இன்னும் ஏன் கம்பவுண்டர் வரல்லே?" என்று என்னிடம் கேட்பார்.

"அவசரமான பணி இருந்திருக்கும், போயிருப்பார். இங்கு வழக்கமாக வருபவர்தானே? வந்து விடுவார்" என்று நான் பதிலளிப்பேன்.



“இந்த சர்க்கரை வியாதி தொந்தரவு கொடுக்குதுப்பா. நாள் தவறாம ஊசி போட்டுக்கணும். அதான் வரலியேன்னு உன்னைக் கேட்டேன்” என்பார்.

அவர் கூறி முடிப்பதற்குள் கம்பவுண்டரே வந்துவிடுவார். நான் கூறியபடியே ஏதோ அவசர கேஸ் போய் வந்ததாகச் சொன்னார். இன்சுலின் ஊசி மருந்து செலுத்திவிட்டுப் போவார்.

**கைமுறுக்கு பற்றி**

ஒரு சமயம் பிற்பகல் நேரம் பாவேந்தர் அவர்கள் சொல்லச் சொல்ல நான் நாடகத்தை எழுதிக் கொண்டிருக்கிறேன். சட்டென்று நிறுத்திவிட்டு, கையமர்த்தினார். நான் எழுதுவதை நிறுத்திவிட்டு அவரைப் பார்த்தேன்.

எழுதும்போது சோர்வு தட்டாமல் இருக்க, இடை யிடையே இடைவெளி கொடுத்துச் சில ரசமான செய்திகளைச் சொல்வார். அதில் மனமகிழ்ச்சியும், புதுத் தெம்பும் பிறக்கும். இந்த வழக்கம் அவருடைய இயல்பான குணம்.

“எனக்குக் கைமுறுக்கு ரொம்பப் பிடிக்கும்பா” என்று கூறினார். நான் செவிமடுத்துக் கேட்டுக்கொண்டேன்.

மீண்டும் நாடகத்தைச் சொல்ல ஆரம்பித்தார். நானும் விட்ட இடத்தைத் தொட்டேன்.

மறுநாள் காலை வழக்கம்போல் பணிக்குச் சென்றேன். என்னை எதிர்பார்த்த வண்ணம் பாவேந்தர், தெருவைப் பார்த்துக்கொண்டிருந்தார் என்பதைப் புரிந்துகொண்டேன்.

உள்ளே நுழைந்ததும் என்னை அன்போடு வரவேற்றார்.

முதல் வேலையாக நான் கொண்டு வந்திருந்த பையைப் பாவேந்தர் அவர்களிடம் கொடுத்துவிட்டு இருக்கையில் அமர்ந்தேன்.

யார் அவரைப் பார்க்க வந்தாலும் நின்று கொண்டு பேசக் கூடாது. அமர்ந்துதான் பேச வேண்டும். இதுதான் அவர் இட்ட கட்டளை. அன்பு ஆணை.

திண்ணையில் படுத்திருந்தவர் எழுந்து உட்கார்ந்தார்.

பையைப் பிரித்தார். கை முறுக்குகள் காட்சியளித்தன. அவர் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியதை இன்றும் நினைத்துப் பார்க்கிறேன். எல்லையில்லா ஆனந்தம் அடைகிறேன்.



சின்னஞ்சிறு குழந்தை போல இரண்டு முறுக்குகளை ஒடித்து வாயில் போட்டுக்கொண்டார். சுவைத்துச் சுவைத்துத் தின்றார்.

உடனே, "பழனியம்மா! இங்க வா, இதப்பாரு! புள்ளாண்டான் கைமுறுக்கு கொண்டாந்திருக்கான். எவ்வளவு ருசியாயிருக்கு! வாயில் போட்டா வெண்ணெயாக் கரையுது! என்ன மணம்! என்ன மணம்!.... ஊம், எங்கே வாங்கிட்டு வந்தே? எந்தக் கடை?..." என்று குடைந்து கேள்விகளைக் கேட்டார்.

நான் அடக்கமாக, "நேற்று நீங்க கைமுறுக்கு ரொம்பப் பிடிக்கும்னு சொன்னீங்க. மாலை நான் வீட்டுக்குப் போனதும் என் மனைவியிடம் இதுபற்றித் தெரிவித்தேன்."

'இதென்ன பிரமாதம். இதோ இப்பவே மாவு அரைத்து செய்து தருகிறேன்' என்று கூறியவள், அரிசியை எடுத்துக்கொண்டு போய் மாவு மில்லில் அரைத்து வந்தாள். என் சகோதரியும், மனைவியுமாக அடுத்த கணம் முறுக்கு சுற்றத் தொடங்கிவிட்டார்கள்.

"இரவுச் சாப்பாடு போடுவதற்குள் முறுக்குகள் செய்தாகிவிட்டன. அவற்றை ஒழுங்காக உடையாமல், நொறுங்காமல் கவனமாக ஓர் பிளாஸ்டிக் பையில் போட்டு,

'இந்தாங்க நீங்க, கேட்ட முறுக்கு. உங்க ஐயாவுக்குக் கொண்டு போய்க் கொடுங்க' என்று கூறி என்னிடம் இந்தப் பையைக் கொடுத்தாள்' என்று விளக்கினேன்.

"இந்த மாதிரி சுவையான முறுக்கை நான் என் வயதில் இதுவரை சாப்பிட்டதில்லே. பொய்யில்லப்பா. சத்தியமான வார்த்தை. இதுக்கு நான் என்ன உனக்குத் தரப்போறேன். எவ்வளவு கொடுத்தாலும் தகும்..." என்று நன்றி உணர்வோடு பேசினார்.

"இதெல்லாம் என்னங்க. என் தந்தை கேட்டால் நான் தரமாட்டேனா? அதே மாதிரித்தான். இதுக்கெல்லாம் நீங்க எவ்வளவு கொடுப்பீங்க ஐயா?" என்று குறும்பாகக் கேட்டேன்.

"என்ன தரணும் சொல்லு...?" என்றார் சிரித்துக்கொண்டு.

"உங்கள் அன்பைத் தாருங்கள் ஐயா. அது போதும்" என்றவுடன்,

"அதுலேசில்லப்பா, எல்லாரும் வவுத்ல ஒரு பேச்சு இருக்கும். அது தொண்டைக்கு வர்றப்ப மாறும். வடிகட்டிப் பாதிக்குமேலே அழுத்திச் சொற்கள் வாயிலிருந்து வெளிவர்றப்ப போலியா வரும்.



அன்பு அப்படி இல்ல. வவுத்ல இருக்கிற பேச்சு வாயில தடை இல்லாம வரணும். அதை முகமே காட்டிடும். அதுமாதிரி உன் அன்பு'' என்று விளக்கம் தந்து சிரித்தவர், தொடர்ந்தார்:

**குறள் விளக்கம்**

''உனக்குத் தெரியுமா? வள்ளுவர், அன்பைப்பற்றி வெகு அழகாகச் சொல்றாரு. உன் அன்பை இப்ப நினைச்சப்போ அந்தக் குறள்தான் நினைவுக்கு வருது-''

**அன்போடு இயைந்த வழக்கென்ப; ஆருயிர்க்கு**
**என்போடு இயைந்த தொடர்பு**

என்று கூறிவிட்டு அதற்கான விளக்கமும் தந்தார்.

''பிறப்பின் அருமை பிறந்த உயிர் மேல் ஏற்றப்பட்டது. மக்கள் உயிர்க்கு உடம்போடு இயைந்ததே அன்பு. அதாவது உடலுக்கு உயிரோடு பொருந்திய உறவு அன்பாலே ஏற்பட்டதுன்னு வள்ளுவர் சொல்றாரு. அதனால உன் அன்பு வார்த்தையாலே அளவிட்டுக் காட்ட முடியாத பேரன்பு'' என்று பெருமிதம் பொங்க இரண்டு புருவங்களையும் உயரே தூக்கித் தம் இரு கைகளையும் மேலே தூக்கிப் பேசினார்.

அப்படிப்பட்ட நன்றி உணர்வுள்ள மாமனிதர்.

**கவிஞரைக்காண அறிஞர்கள் வருகை**

அன்றாடம் பாவேந்தர் வீட்டிற்குப் பலர் வந்து போவார்கள். தமிழ் அறிஞர்கள், கவிஞர்கள், அரசியல்வாதிகள், கலைஞர்கள் என்று பலதரப்பட்ட வகையினர் பாவேந்தரைக் கண்டு அளவளாவிச் செல்வது அன்றாட நிகழ்ச்சி.

குறிப்பாகச் சொல்லப்போனால் கவிஞர்கள் கண்ணதாசன், தஞ்சைவாணன், தமிழழகன், தமிழ் முடி, நாரா. நாச்சியப்பன், பெருங்கவிஞர் முகவை இராசமாணிக்கம், பேராசிரியர் நாரண துரைக்கண்ணன், சேலம் முருகு சுந்தரம், இசையறிஞர் குடந்தை சீனிவாசன், நடிகமணி டி.வி. நாராயணசாமி, இலட்சிய நடிகர் எஸ்.எஸ். இராஜேந்திரன், சிவகங்கை வான்முகில், எழுத்தாளர் அருண், பாரதியார் மகள் சகுந்தலா பாரதி, கே.ஜி. இராதாமணாளன், இன்னும் பலர்.

ஈ.வி.கே. சம்பத் அவர்களின் வேண்டுகோளை ஏற்றுக் கோவையில் நடந்த தமிழ்த் தேசியக்கட்சி மாநாட்டிற்குச் சென்று உரையாற்றினார்.

பெரியார் ஈ.வெ.ரா.வின் கொள்கையை முழுக்க முழுக்க ஏற்றவர். அவரைத் தம் தலைவராகவே கொண்டு மதிப்பளித்தவர்.



**நான் பெற்றபேறு**

நான் பாவேந்தரிடம் தமிழ் இலக்கியப் பணிக்கு உதவியாளனாகத் தொண்டு செய்ததை என் வாழ்நாளில் கிடைத்த பெரும் பேறாகவே எண்ணி உள்ளம் பூரிக்கிறேன்.

தினமும் எனக்கு ஊதியம் அளித்துவிடுவார். அவரிடம் பணி செய்வதைப் பெருமையாக நான் எண்ணினேன். அவர் என்னைப் பணியாளாகக் கருதாமல் சக தோழனாகவும், பெற்ற மகனைப் போலவும் பாச உணர்வோடு பழகினார்.

அவர் அன்றாடம் எனக்களித்த ஊதியம் எவ்வளவு என்று தெரியுமா? வியப்படையாதீர்கள்! ஒரு நாளைக்கு எனக்கு 150 புதுக்காசுகள் (ரூ. 1.50) கொடுத்தார்!

இந்த ரூ. 1.50 சென்னையில் ஓர் குடும்பம் நடத்தப் போதுமா? நான் ஊதியமாகக் கருதவில்லை. பாவேந்தர் எனக்களித்த அன்பளிப்பாக எண்ணினேன்.

பாவேந்தரின் நாட்குறிப்பேட்டில் இன்றைக்கும் பார்க்கலாம். என் பெயரைக் குறிப்பிட்டு எழுத்துக்கூலி ரூ. 1.50 என்று எழுதியிருப்பதை பொருளாதார ரீதியில் நான் இதை ஏற்கவில்லை. ஓர் கவிச்சிங்கத்திடம் தொண்டு செய்கிறோம் என்ற ஒரே பெருமைதான்.

பாரதியார் பற்றிப் பாவேந்தரிடம் கேட்டேன்:

**பாரதியாரைப் பற்றி**

**ஐயரைப்பற்றி நிறையச் செய்திகள் சொல்லணும். நான் அவரோட பத்து ஆண்டுகளுக்குமேல் நெருங்கிப் பழகினேன். முதல் முதலில் ஒரு திருமண நிகழ்ச்சியில்தான் எங்கள் சந்திப்பு நிகழ்ந்தது. என்னைப் பார்த்ததுமே என் கைகளைப் பிடித்துக்கொண்டு, "நீ பாடல்கள் எழுதறவனாமே. எங்கே பாடு" என்று ஆர்வத்தோடு கேட்டார்.**

அப்போதெல்லாம் நான் கடவுளர் மீது பாடல்கள் இயற்றிக் கொண்டிருந்தேன். பராசக்தி, சுப்பிரமணியர் துதி!... இப்படி.

பாரதியார் என்னைப் பாடு என்றதும் என் உடம்பில் ஓர் மின்சாரம் பாய்ந்த உணர்வு ஏற்பட்டது. என் உள்மனம் அவரையே குருவாக ஏற்றுக்கொண்டது. 'குரு கட்டளையிடுகிறார் பாடு' என்றது என் உள்ளம். உடனே பாட ஆரம்பித்தேன்.

**"எங்கெங்கு காணினும் சக்தியடா - தம்பி**
**ஏழுகடல் அவள் வண்ணமடா! - அங்குத்**
**தங்கும் வெளியிற் கோடி யண்டம் - அந்தத்**
**தாயின் கைப் பந்தென ஓடுமடா!"**

பாடி முடித்தேன்.

புகழ்மாலை

"பலே பலே! உன் பாடலுக்கு அட்சர லட்சம் கொடுக்கலாம். உன்னை அந்தப் பராசக்தி பாட வைத்துவிட்டாள்" என்று புகழாரம் சூட்டி அப்படியே இறுகத் தழுவிக்கொண்டு முதுகில் 'ஷொட்டு' கொடுத்தார்.

இதுவே எங்கள் முதல் சந்திப்பு.

தொடர்ந்து அவருடன் பழக ஆரம்பித்தேன். குடும்பக் கவலைகள் பட்டதே இல்லை. எப்போதும் தேசவிடுதலை பற்றிய சிந்தனைதான். எண்ணம் எழுத்து எல்லாமே தேசம் பற்றியதுதான்.

அவர் முப்பத்தொன்பது பிராயம் மட்டுமே இவ்வுலகில் வாழ்ந்தார். ஆனால் விட்டுச் சென்ற பாடல்கள் கார் உள்ளளவும், கடல் நீர் உள்ளளவும் நிலைத்து நிற்கும். பண்டித நடையை எளிமையாக்கி எளிமையான சொற்களைக் கொண்டு கவிதைகள் - உயிர்க் கவிதைகள் படைத்தார். அவர் பாடாத பொருளில்லை. அவர் கவிதைகளில் நெருப்பின் சூடு இருக்கும்.

ஐயரின் குணம் தங்கமானது. வெகுளியான பேச்சு. கணீரென்ற குரல். இவருக்குத் தமிழ், வடமொழி, பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிகள் நன்றாகத் தெரியும்.

கவிதை புனையும் அளவுக்கு அவருக்கு அம்மொழிகளில் புலமையும், திறமையும் இருந்தன.

அவர் கூனி நிற்கவே மாட்டார். நிமிர்ந்த நடை, கம்பீரமான தோற்றம். சரசரவென்ற வேகமான நடை.

முறையாகச் சங்கீதமும் பயின்றவர்; பேச்சு பாக்குவெட்டியில் பாக்கு தெறிப்பது போல் பிசிர் இல்லாமல் இருக்கும். வார்த்தைகள் சிதைவு பெறாமல் அட்சர சுத்தமாகப் பேசுவார், பாடுவார்.

> என்னைக் கவிஞர் என்று இந்தத் தமிழ்ச் சமுதாயத்திற்கு அடையாளம் காட்டியவர் ஐயர். நான் அவ்வரை ஐயர் என்றுதான் சொல்வேன்

என்று பெருமிதத்துடன் கூறிவிட்டுப் பாவேந்தர் என்னைப் பார்த்தார்.

> ''ஐயா! பாரதியாரை ஐயர் என்று சொல்கிறீர்களே, புதுச்சேரியில் இன்னொரு ஐயர் வ.வே.சு. ஐயர் இருந்தாரே. ஐயர் என்றால் யாரைக் குறிக்கும்?'' என்று கேட்டேன்.

> ''பாரதியார்தான் ஐயர். வ.வே.சு. ஐயர், மகரிஷி வ.வே.சு., மகரிஷி அரவிந்தர் என்றுதான் எல்லோரும் அழைப்பார்கள்'' என்று என் ஐயப்பாட்டை நீக்கினார்.



புரட்சிக் கவிஞர் தொடர்ந்தார்:

பாரதியார் சிறந்த தமிழ்ப் பண்டிதர். இலக்கண இலக்கியங்களை நன்கு பயின்றவர். பாரதியார் ஒரே நாளில் அத்தனை கவிதைகளையும் புனையவில்லை. வெவ்வேறு சூழ்நிலையில் கால கட்டங்களில் அவர் உள்ளம் பொங்கும்போது கவிதைகள் பிறந்தன.

பழைய மரபையும் மறக்காமல் அதே நேரத்தில் புதிய பாதையையும் செப்பனிட்டுக் காட்டிச் சென்றவர்.

காலம்தான் கவிஞனை உருவாக்குகின்றது. பாரதி வாழ்ந்த காலம் வெள்ளை ஏகாதிபத்தியத்தால் அடிமைப்படுத்தப் பட்டிருந்த காலம். நம் மக்களை படைபலம் கொண்டு அச்சுறுத்திய காலம்.

புழுங்கியிருந்த மக்கள் உள்ளத்தில் தேசப்பற்றைத் தம் அனல்கக்கும் கவிதைகளால் எழுச்சியுறச் செய்தவர் பாரதி. காலமும் சூழ்நிலையும் அவரை மகாகவியாக ஆக்கியது.

பாரதியார் தமிழ்மொழிக்காக, தமிழ் நாட்டிற்காக அல்லும் பகலும் பாடுபட்டவர். எதையும் எதிர்பார்த்து அவர் கவிதை படைக்கவில்லை.

அந்நிய ஏகாதிபத்தியக் கொடுமை அவரைக்
கவிதை படைக்க வைத்தது

என்று கூறி நிறுத்தினார்.

நான் மேலும் சில கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தேன்.

**சுதேசி ஆடைகள்**

"ஐயா! பாரதி கதர் கட்டவில்லை என்று சிலர் குறை கூறுகிறார்களே?" என்று கேள்வியைச் சொடுக்கினேன்.

"என்ன?..." என்று சிங்கம் கர்ஜிப்பது போல் கேட்டார். பின் தொடர்ந்தார்:

"பாரதியார் வாழ்ந்த காலையில், சுதேசி விதேசி என்றுதான் கூறுவது வழக்கம்.

சுதேசி என்றால் நம் நாட்டுப் பொருள்கள்; விதேசி என்றால் அந்நிய நாட்டுப் பொருள்கள். பாரதியார் சுதேசி ஆடைகளையே அணிந்தார்."

மகாத்மா காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்தில் கதர் திட்டமும் ஒன்று. பாரதி யிருக்கும்போது அத்திட்டம் அமலுக்கு வரவில்லை. அவருக்குப் பிறகுதான் நாட்டில் கைராட்டையில் நூல் நூற்று கதர் துணிகள் அணியத் தொடங்கினார்.



**பாரதியின் தோற்றம்**

பாரதியார் வால்விட்ட பஞ்சகச்சம்தான் கட்டுவார்.

சட்டைக்கு மேல் கோட்டு அணிவார். தலையில் தலைப்பாகை. முகத்தில் முறுக்கிவிட்ட மீசை. கண்களில் ஒளி.

**சுந்தரேச அய்யர்**

புதுச்சேரியில் திரு. சுந்தரேசய்யர் என்பவர் துணிக்கடை வைத்திருந்தார். பாரதியாருக்கு மிகுந்த நெருக்கமானவர். அவர் கடைக்குத் தினமும் செல்வார். அவருடன் பேசுவார்.

ஒருநாள் பாரதியார் அவர் கடைக்குச் சென்றார். சுந்தரேசய்யர் அவரை மிகுந்த மரியாதையோடு வரவேற்று அமர வைத்தார்.

'இன்று மாலை ஒரு கூட்டத்திற்கு அக்ராசனம் வகிக்கிறேன். தலைப்பாகைக்கு வஸ்திரம் இல்லை...' என்றார் பாரதியார்.

'உடனே அவருக்குத் தேவையான அங்க வஸ்திரத்தைக் கொடுத்துடன் புத்தம் புதுவேட்டி அரையில் கட்டிக் கொள்வதற்கும் தலைப்பாகைக்கான துணியும் அளித்து கைச்செலவுக்காக ஏதோ தொகை கொடுத்தாராம்.

'மிக்க நன்றி சுந்தரேசய்யர். நான் வருகிறேன்' என்று கலகலவென்று சிரித்தபடி கூறிவிட்டுச் சென்றார்.

இன்னொரு சமயம் ஐயர் அவர்களைப் பணப் பிரச்சனை வாட்டியது. குடும்பம் தகுந்த வருவாயின்றி தத்தளிக்கிறது. இந்த நேரத்தில் சுந்தரேசய்யர் வருகிறார்.

பாரதியார் கால்மேல் கால் போட்டுக்கொண்டு வானத்தைப் பார்த்துக்கொண்டு அமர்ந்திருக்கிறார். சுந்தரேசய்யர் வந்ததுகூடத் தெரியவில்லை.

சுந்தரேசய்யர் தாம் வந்திருப்பதற்கு அடையாளமாகச் செருமினார்.

சட்டென்று எழுந்த பாரதியார். "வாரும், வாரும். வந்து நெடுநேரமாயிற்றோ?" என்று அவருக்கே உரிய பாணியில் கேட்டார்.

"ஆம்" என்றார் சுந்தரேசய்யர்.

"இப்படி அமரும்" என்று திண்ணையைக் காட்டினார். சுந்தரேசய்யரும் அமர்ந்தார்.

சற்று நேரம் மௌனம் நிலவியது.

சுந்தரேசய்யர் பாரதியாரின் குடும்பப் பிரச்சனையை யூகமாக உணர்ந்தார். எழுந்தார்.



பாரதியாரிடம், "இதோ வந்துவிட்டேன்" என்று கூறியவர் நேராக வீட்டிற்குச் சென்று தம் மனைவியிடம் நிலைமையைக்கூறி அவளுடைய நகையை வாங்கிக்கொண்டு லேவாதேவி நடத்தும் ஓர் செட்டியாரிடம் அதை அடகு வைத்துப் பணம் பெற்று ஓடோடி வருகிறார்.

சுந்தரேசய்யர் ஓடி வருவதைப் பார்த்து பாரதியார்,

"என்னய்யா, தமிழ் நாட்டில் சுதந்திரப் போராட்டம் உச்சகட்டமா?" என்று துடிப்போடு கேட்டார்.

"போராட்டம் வெளியிலும்தான் வீட்டிலும்தான்" என்றவர், கையில் கொண்டுவந்த தொகையை யாருக்கும் தெரியாமல் பாரதியார் கையில் வைத்து மூடுகிறார். அந்த அளவுக்கு பாரதியாருடன் அந்தரங்கமான நட்பு.

சுந்தரேசய்யர் கொடுத்ததைத் தட்டாமல் ஏற்றுக்கொண்டார்.

இந்தச் செய்தியை ஐயரே என்னிடம் ஒளிவு மறைவு இன்றிக் கூறினார் - என்று முடித்தார்.

இதைக் கேட்ட எனக்குப் பெரும் வியப்பாக இருந்தது.

"இப்படி எத்தனையோ செய்திகள்" என்று தாழ்ந்த குரலில் கூறி வருந்தினார்.

**சீனப் படையெடுப்பின்பொழுது**

1962இல் சீன ஆக்கிரமிப்பு நேர்ந்தபோது பாவேந்தர் அவர்கள் நெருப்புக்கவிதை எழுதினார்.

"நீ என் நாட்டில் ஆக்கிரமித்தால் நாங்கள் உங்கள் நாட்டில் எங்கள் மூவர்ணக் கொடியைப் பறக்கவிடுவோம்" என்று 'அமுதசுரபி' தமிழ் இலக்கிய மாத ஏட்டில் எழுதி வெளிவந்த கவிதையை என்னால் இன்றும் மறக்கமுடியாது.

நான் ஏன் இதைக் குறிப்பிடுகிறேன் என்றால் பாவேந்தரின் தேசிய உணர்வை எடுத்துக் காட்டவே இங்கே கூறவேண்டியது என் கடமையாகிறது.

**குயில் பாட்டில் தத்துவம்**

ஒருசமயம் பாவேந்தர் ஓய்வாக அமர்ந்திருந்தார். நானும் அமர்ந்திருந்தேன்.

"ஐயா! எனக்கொரு ஐயப்பாடு" என்று ஆரம்பித்தேன்.

"என்ன ஐயப்பாடு? எதிலே ஐயப்பாடு?" என்றார்.



"பாரதியாரின் குயில்பாட்டின் இறுதியில் 'ஆன்ற தமிழ்ப் புலவீர்! கற்பனையே யானாலும் வேதாந்தமாக விரித்துப் பொருள் உரைக்க யாதானும் சற்றே இடமிருந்தாற் கூறீரோ?' என்று கேட்கிறார்.

அதற்குப் பலர், பாரதியார் ஓர் வேதாந்தி என்றும், தத்துவமேதை என்றும் பலவாறு விளக்கங்கள் அளிக்கிறார்கள். தாங்கள் பாரதியாரோடு நெருங்கிப் பழகியவர். இதற்குத் தாங்கள் என்ன பதில் கூறுகிறீர்கள்?" என்றேன்.

வழக்கம்போல் 'பொக்'கென்று வாய்விட்டுச் சிரித்துவிட்டு,

"அப்படிக் கேளு. நான் அதுக்கு விளக்கம் சொல்றேன்" என்று ஆரம்பித்தார்.

"பாரதியாரை ஓர் வேதாந்தி என்று எல்லோரும் சொல்கிறார்கள். அதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். வேதாந்த அறிவு நிரம்பியவர். அரவிந்தர், வ.வே.சு. ஐயர் அவர்களுடன் பழகி வேதாந்த விசாரம் செய்திருக்கிறார் என்பது உண்மை. ஆனால் வேதாந்தி அல்லர். இதைப் பலபேர் புரிந்துகொள்வதில்லை.

நான் கையை மூடிக்கொண்டு சிறுவரிலிருந்து பெரியவர் வரை 'இதிலென்ன இருக்கிறது?' என்று கேட்டால் என்ன பதில் சொல்வார்கள்? தங்கள்

அறிவுக்கும் அனுபவத்திற்கும் ஏற்றபடி பதில் கூறுவார்கள்.

சிறியவர்கள் மிட்டாய், பலப்பம், சாக்பீஸ்! இப்படி பதில் சொல்வார்கள். பெரியவர்கள் தங்கள் நோக்கத்தில் பதில் கூறுவது அவரவர் யூகந்தான் என்பதே உண்மை.

ஆனால், கையில் ஒன்றுமில்லை என்பது கையை மூடிக்கொண்டிருக்கும் எனக்குந்தான் தெரியும்.

இதுபோன்றதுதான் ஐயரது குயில்பாட்டின் கடைசிக்கேள்வி. மற்றவர்களின் அறிவைக் கிளற எண்ணிக் கேட்ட சொடுக்கல் (Twist) கேள்விதான். எனக்கு நன்றாகத் தெரியும்'' யாரும் இதுவரை சொல்லாத புது விளக்கத்தை அளித்தவர் பாவேந்தர்.

**புதுமை தோன்றப் பேசுவார்**

பாவேந்தர் எந்தச் செய்தியைச் சொன்னாலும் அச்செய்தியில் புதுமை கலந்தே சொல்லுவார். புரியாத விஷயங்களையும் புரியும்படிக் கூறி விளக்குவதில் வல்லவர்.

இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள் சொல்லிக்கொண்டே போகலாம். சொல்லுகின்ற முறையில் புதுமை, சொல்லுகின்ற பொருளில் புதுமை, சொல்லுகின்ற நடையில் எளிமை. இவை



எல்லாவற்றையும்விட, தீக்குள் விரலை வைத்த உணர்வு அவர்தம் பேச்சில், கவிதைகளில் மிளிரும் என்பதை எல்லோரும் அறிவார்கள்.

எழுதும்போது சோர்வு தட்டாமல் இருக்க, இடையிடையே இடைவெளி கொடுத்துச் சில சுவையான செய்திகளைச் சொல்வார். அதில் மன மகிழ்ச்சியும், புதுத் தெம்பும் பிறக்கும். இந்த வழக்கம் அவருடைய இயல்பான குணம்.

**மாமரம் - விளக்கம்**

நண்பகல் நேரம்! பாவேந்தர் அவர்கள் வீட்டின் முகப்பிலிருந்த திண்ணையில் சாய்ந்து படுத்திருக்கிறார். நான் எழுத்துப்பணியில் ஈடுபட்டிருக்கிறேன். அவரைப் பார்க்க நண்பர்கள் சிலர் வருகிறார்கள்.

திண்ணையையொட்டிக் கொஞ்சம் திறந்தவெளி. அதில் ஒரு மாமரம் நீண்டுயர்ந்து நிழல்கொடுத்துக் கொண்டிருந்தது. நண்பர்கள் திறந்தவெளியில் அமர்ந்திருக்கிறார்கள்.

அவர்களில் ஒருவர் நாம் மாமரத்தின் நிழலில் அமர்ந்திருக்கிறோம்'' என்று கூறினார்.

‘‘ஆமாம், ஆமாம்! நாம் மாமரத்து நிழலில்தான் உள்ளோம்'' என்று சிலேடையாகப் பதில் அளித்தார், பாவேந்தர்.

மாமரம் என்பதற்கு மாங்காய் காய்க்கும் மரம் என்று ஒருபொருள். மற்றொன்று, பெரிய மரம் என்று பொருள்படும்.

இவ்வாறு சிலேடையாகவும், நகைச்சுவை காட்டியும் பேசுவதில் வல்லவர் பாவேந்தர் அவர்கள்.

**நடிகமணியிடம் நல்லுரை**

ஒரு சமயம் நடிகமணி டி.வி. நாராயணசாமி அவர்கள் நானில்லாதபோது பாவேந்தருடன் பேசிக்கொண்டிருந்திருக்கிறார். அப்போது நான் 'படி' எடுக்கும் பிரதிகளைப் பார்த்து, 'இதை யார் எழுதுகிறார்' என்று கேட்டிருக்கிறார். பாவேந்தர் அவர்கள் என்னைப்பற்றி அவரிடம் மிக உயர்வாகப் பேசியதை அவரே பின்னர் என்னிடம் கூறியிருக்கிறார்.

**பாரதியார்-திரைப்படம்**

பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றைத் திரைப்படமாக்கவேண்டும் என்பதே பாவேந்தரின் பேரவா.

அதற்கான முயற்சியில் இறங்கினார். ஒரு குழுவையும் அமைத்தார். அதில் டைரக்டர் ஏ.டி. கிருஷ்ணசாமி, பாரதியாரின் மகள்கள் தங்கம்மா பாரதி, சகுந்தலாபாரதி, எழுத்தாளர்கள் அருண், நாரண துரைக்கண்ணன், ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த



இராமநாதன், கே.ஜி. இராதாமணாளன், அகிலன் போன்றோர் இருந்தனர்.

படத்திற்கான ஆக்கப் பணிகளில் முனைந்தார். முன்பாக ஆலோசனைக் கூட்டங்கள் ஏற்பாடு செய்து கருத்துப் பரிமாற்றமும் தொடர் நடவடிக்கைகளும் விரைவாக நடந்தன.

பாரதியாரின் புகழ் உலகமெலாம் பரவவேண்டும். அவருடைய வாழ்க்கை வரலாற்றை அனைத்து மக்களும் தெரிந்துகொள்ளவேண்டும் என்று மிக விரும்பினார்.

பாரதியார் திரைப்படம் பற்றிய துண்டுப் பிரசுரங்கள் அச்சடித்தார்.

படத்திற்கான உரையாடலை இராப் பகலாக எழுதி முடித்தார்.

எல்லாம் முடிந்தநிலையில் ஒருநாள் மதியஉணவு உண்டு சற்று இளைப்பாறினார். வழக்கம்போல் நான் 'படி' எடுக்கும் பணியில் ஈடுபட்டிருந்தேன்.

**ஆர்வமும் விருப்பமும்**

படுத்திருந்தவர் சட்டென்று எழுந்து உட்கார்ந்தார்.

நான் இதைப் புரிந்துகொண்டு எழுதுவதை நிறுத்திவிட்டு; என் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு அவரைப் பார்த்தேன்.

"சும்மா சொல்லப்படாது. குறிப்பறிஞ்சு நீ செயல்படறே" என்று சொல்லிவிட்டுத் தொடர்ந்தார்.

"இத பாத்தியா? பாரதியார் படத்திற்கான உரையாடல் முழுவதையும் எழுதி முடிச்சிட்டேன். இதிலே எனக்கு எவ்வளவு மனநிறைவும் மகிழ்ச்சியும் ஏற்பட்டிருக்கு, தெரியுமா?" என்று தம் உள்ளப் பூரிப்பை வெளிப்படுத்தினார்.

நான், அவர் மேலும் செய்திகள் கூறவிருப்பதைப் புரிந்துகொண்டு அவர் முகத்தையே பார்த்தேன்.

அவர் தொடர்ந்தார்:

எழுத்து வேலையெல்லாம் முடிஞ்சிடுத்து. இனி படப்பிடிப்பு வேலையைத் தொடங்க வேண்டியதுதான். நீ எனக்கு உதவியாளனாக இருக்கணும். பொருளாதாரச் செழுமை சினிமாப் படத்துறையிலதான் இருக்கு. உன்னை அந்தத் துறையிலே புகுத்திவிட்டா நீ பணக்கஷ்டம் இல்லாம சௌகர்யமா இருப்பே.

"என்னிடம் பலபேர் வந்து, 'எனக்கு அதை வாங்கிக்குடுங்க, இதைச் செய்துகுடுங்க; அப்படி இப்படின்னு நச்சரிப்பாங்க..."



"நீ என்னடான்னா எதுவுமே கேட்க மாட்டேங்கறியே! உன்ன மாதிரி ஆள் கிடைச்சா எல்லாரும் ஏமாத்திடுவாங்க. நீ எப்படி பிழைக்கப் போறியோங்கறத நினைச்சுத்தான் வருத்தப்படறேன்.

"ஐயரின் வாழ்க்கை வரலாற்றை உள்ளது உள்ளபடி மக்கள் அறியச் செய்யணுங்கறதுதான் என் ஆசை. இதிலே அரசியல் சாயம் கலக்கப்படாது. இந்தப் பட முயற்சி வெற்றி பெற்றால் என் ஆயுளில் நான் செய்த பெரிய சாதனைன்னு நினைப்பேன். இது என் கடமை. என் உடம்பு நிலையைக்கூட சட்டை பண்ணாம இந்த வேலையை முடிச்சிருக்கேன்" என்று பெருமிதத்தோடு கூறி முடித்தார்.

**ஐயர் எனலாமா?**

பாரதியாரை, 'ஐயர்' என்றே பாவேந்தர் அவர்கள் குறிப்பிடுவார். அதேபோல் என்னையும் 'ஐயர்' என்றே விளிப்பார்.

நான் கேட்பேன், 'ஏன்ய்யா! சாதியே இல்லேன்னு நாம சொல்றப்போ, சாதியைக் காட்டி ஐயர்னு கூப்பிடுறீங்களே?' என்று.

'பொள்'ளென்று சிரித்துவிட்டு,

"அதென்னமோப்பா, முன்னாலே எனக்கு இருந்த ஐயர் பாரதியார். எனக்கு இப்போ இருக்கிற ஐயரு நீதான்!"

என்று கள்ளங்கபடமின்றி நிறைந்த மனத்தோடு மொழிந்ததை இன்றைக்கும் எண்ணிப் பார்க்கிறேன். என் உடல் புல்லரிக்கிறது.

இம்மாதிரி உயர்ந்த உள்ளம் கொண்ட கவிஞரை இனி எங்கே பார்க்கப்போகிறோம் என்ற ஏக்கம்தான் மிஞ்சுகிறது.

**சீர்காழி கோவிந்தராஜன்**

ஒரு சமயம் காலஞ் சென்ற இசைக் கலைஞர் சீர்காழி கோவிந்தராசன் அவர்கள் பாவேந்தரைப் பார்க்க வந்திருந்தார்.

முதலில் பாவேந்தர் அவர்களின் பாதங்களில் விழுந்து வணங்கி எழுந்தார்.

"என்ன சமாசாரமா வந்தே?" என்று வினவினார்.

"ஐயா! நான் நாளை திருச்சி செல்கிறேன். அங்கே ஓர் இசை நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதில் நான் பாடுகிறேன்" என்றார்.

"ரொம்ப சரி, நல்லா பாடு; பேரும் புகழும் வாங்கு" என்று வாழ்த்தினார்.

"அந்நிகழ்ச்சியில் தங்கள் பாடல்கள் சிலவற்றைப்பாட ஆசைப்படுகிறேன். அதற்குத் தங்கள் ஒப்புதல் வேண்டியே வந்திருக்கிறேன்" என்றார்.

"சரி, பாடு... உம். கச்சேரிக்கு எவ்வளவு பணம் வாங்கிறே" என்றார்.

"இரண்டாயிரம் ரூபாய்" என்று பதிலளித்தார்.

"என் பாட்டைப் பாடறதுக்கு என்ன கொடுப்பே" என்று வினா விடுத்தார்.

"ஐயா! தாங்கள் என்ன கேட்கிறீங்களோ தருகிறேன்" என்று பதில் கூறினார்.

சிறிது மௌனமாக இருந்து விட்டுப் பிறகு பேசினார்.

"அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம் சும்மா பாடு. ஆனா பாடல் சொற்களைச் சிதைக்காமல் அழுத்தந்திருத்தமா பாடணும்..." என்றார்.

"அப்படியே செய்கிறேன்யா" என்றார் சீர்காழி.

"சங்கீதக் கச்சேரி பண்றவங்கள்ளாம் இசைக்காக வார்த்தைகளை வெட்டியும் சேர்க்காத இடத்திலே சேர்த்தும் பாடறாங்க. அந்த மாதிரி பாடப்படாது" என்றார்.

"சரி ஐயா" என்றவர் மீண்டும் பாவேந்தரை வணங்கி எழுந்து விடைபெற்றார். பாவேந்தர் அவர்கள் சீர்காழி கைகள் இரண்டையும் பிடித்துக் கொண்டு மகிழ்ச்சி பொங்க விடை கொடுத்தார்.

**தெசிணியைப்பற்றி**

கவிதைகள் கேட்ட பத்திரிகைகளுக்குக் கொடுத்துவிட்டு அன்பளிப்புத்தொகை வாங்கிவருமாறு பாவேந்தர் அவர்கள் பணிப்பார்கள். அதன்படி செல்வேன். சிலர் உடனே தொகை தருவார்கள். சிலர் பிறகு அனுப்புவதாகக் கூறுவார்கள்.

இந்த வகையில்தான் நான் கவிஞர் தெசிணி நடத்தி வந்த 'கவிதை' பத்திரிகைக்குச் சென்றேன். அலுவலகம் வண்ணாரப்பேட்டையில் இருந்தது. அவர் வீட்டிலேயே அலுவலகம் வைத்துக் கொண்டிருந்தார்.

கவிஞர் தெசிணி வெளியில் சென்றிருப்பதாகவும், சற்று நேரத்தில் வந்துவிடுவாரென்றும் தகவல் கிடைத்தது. எனவே காத்திருந்தேன்.

அவரும் வந்துவிட்டார். என்னை அடையாளம் கண்டுகொண்டார். முதலில் நலம் விசாரித்தார். பிறகு பத்திரிகை நடத்துவதில் உள்ள சிரமங்களைக் கூறினார்.

'பத்திரிகையில் நான் இலாபத்தை எதிர்பார்க்கவில்லை. நட்டமாகாமல் சரிக்கட்டினால் போதும்' என்றார்

அவர் என்னிடம் பகிர்ந்துகொண்ட அவலங்களை அப்படியே ஐயாவிடம் கூறுங்கள் என்று கண்ணீர்விடாக் குறையாகத் தெரிவித்தார்.



நானும் அவரிடம் விடைபெற்றுப் பாவேந்தர் அவர்களிடம் எல்லாவற்றையும் விளக்கினேன்.

"வெளியில் பகட்டா மின்னுதேன்னு நினைத்துத்தான் உன்னை அனுப்பினேன். இப்பத்தான் தெரியுது. நம்ம குயில் போலத்தான் நடக்குது. ஊம், பாவம், அவர் என்ன செய்யமுடியும்! போவட்டும் போ. ஒழுங்கா நிறுத்தாமல் பத்திரிகையை நடத்தினா அதுவே பெரிய காரியம். பத்திரிகையிலே ஏற்பட்ட நட்டத்தை ஈடு செய்ய வீட்டை வித்துத்தான் ஆவணும்னு வந்துட்டாரா? அதை நான் விரும்பலை.

தன்னம்பிக்கையை எக்காரணம்கொண்டும் இழக்கவேண்டாம்னு ஐயா சொன்னதா நீ அவர்கிட்டே சொல்லு. இடையிலே ஒருநாள் என்னை வந்து பார்க்கச் சொல்லு" என்று கூறிக் கவிஞர் தெசிணிக்கு ஆறுதல் தெரிவித்தார்.

பாவேந்தர் அவர்கள் கவிஞர் தெசிணியிடம் பெருமதிப்பு வைத்திருந்தார். மரபுவழி பிறழாமல் உரைநடையின்றிக் கவிதையிலே செய்திகள் தருகிறார்.

பல ஆண்டுகள் நட்டத்தில் பத்திரிகை நடத்தியவர். தம் வீட்டை விற்றுக் கடன்களை அடைத்தார் என்று தெரியவந்தது.

கவிஞர் தெசிணி நடத்திய 'கவிதை' இதழ் சிறப்பான மரபுக்கவிதை ஏடு.

நேர்மை, சத்தியம் இவை கொள்கைகளாகக் கொண்டு தமிழ் இலக்கியப் பணியை வேள்வியாகச் செய்தவர்.

பாவேந்தர் மறைவுக்குப் பின்னர் வீட்டை விற்றார் என்ற தகவல் கிடைத்தது.

**பாவேந்தர் உடல் நலிவு**

17.4.1964 வெள்ளிக்கிழமை, காலை எட்டுமணிக்குப் பாவேந்தர் வீட்டுக்கு வழக்கம்போல் சென்றேன். பாவேந்தர் எப்போதும்போல் உற்சாகமாக இல்லை. முகத்தில் சோர்வு தெரிந்தது.

"ஏன்ய்யா! என்னவோ போல இருக்கீங்க? உடல் நலம் சரியில்லையா?" என்று அவரைக் கேட்டேன்.

சற்றுப் பேசாமல் இருந்தவர் பேசினார்.

"ராத்திரி பூரா ஒரே மார்வலி. சரியாப் போயிடும்னு நெனச்சேன். வலி இருந்திட்டே இருக்கு..." என்று சொன்னார்.

பிறகு, "தவிடு ஒத்தடம் கொடுக்கலாமா?" என்றும் கேட்டார்.



“மார்பில் தவிடு ஒத்தடம் கொடுக்கக் கூடாதய்யா” என்று சொன்னேன்.

“அப்படியா...” என்று கேட்டு என் வார்த்தையை ஏற்றுக்கொண்டார்.

“இன்னைக்குப் புது வேலை இல்லை. பழசைப் படி எடுத்துட்டு வீட்டுக்குப்போ” என்று பணித்தார்.

என் பணியை முடித்துவிட்டு மூன்றுமணிக்கே வந்துவிட்டேன்.

மறுநாள் அதாவது 18.4.1964 காலை எப்போதும்போல் பாவேந்தர் வீடு சென்றேன். ஆனால் பாவேந்தரிடம் உற்சாகம் குறைந்திருந்ததைக் கண்டேன், வினவினேன்.

“விட்டதை முடிச்சிட்டுப்போ. புதுசா எனக்குச் சொல்ல முடியல்லே” என்று கூறவே, அவருடைய உடல் உபாதையைப் புரிந்துகொண்டேன்.

மீதமுள்ள நாடகத்தைப் படி எடுத்து முடித்துவிட்டுப் பாவேந்தரிடம் விடைபெற்று வீடு சேர்ந்தேன்.

## துன்பச் செய்தி

மறுநாள் காலையில் - அதாவது 19.4.1964. என் வீட்டிற்கு ஒருவர் வருகிறார்.

"ஐயாவுக்கு மார்வலி அதிகமாயிடுச்சு. நேத்து சாயந்திரம் ஜெனரல் ஆஸ்பத்திரிலே சேர்த்திருக்காங்க. அம்மா உங்களை கூட்டியாரச் சொன்னாங்க" என்று செய்தி தெரிவித்தார்.

உடனே அவருடன் சென்னை அரசினர் பொதுமருத்துவமனை நோக்கி விரைகிறேன்.

**மருத்துவ மனையில்**

ஐந்தாம் எண்ணுள்ள பொதுவார்டில் ஏழாம் எண்ணுள்ள படுக்கையில் பாவேந்தர் அவர்கள் நினைவு தவறிய நிலையில் இருந்ததைக் கண்டேன். என் நிலை என் வசமில்லை.

அவருக்கு 'குளுகோஸ்' ஊசிமூலம் செலுத்தப்பட்டது. பிராணவாயு குழாய் மூலம் செலுத்தப்படுவதையும் பார்த்தேன்.

பாவேந்தரின் நிலை குறித்து அவர் மகன் மன்னர் மன்னனுக்கும், மகள்களுக்கும் செய்தி பறந்தது. இதன் பொறுப்பு முழுவதையும் கவிஞர் பொன்னடியான் அவர்கள்தான் ஏற்றிருந்தார். இரவுபகல் முழுவதும் அவரது படுக்கைக் கருகிலேயே சோகமே உருவாக அமர்ந்திருந்தார்.

பாவேந்தருடன் சொல்லின் செல்வர் சம்பத் மிகுந்த ஈடுபாடு உடையவர். பாவேந்தருக்கும்

அவரிடம் பற்றும் பாசமும் அளவுகடந்து இருந்தது.

முதல்நாள் ஈ.வி.கே. சம்பத், கவிஞர் கண்ணதாசன் ஆகியோர் பாவேந்தரிடம் பேசிக்கொண்டிருந்திருக்கிறார்கள். அப்போது கவிஞர் அவர்களிடம் ஏதோ சொன்னாராம்.

பாவேந்தரின் உடல்நிலை குறித்து சொல்லின் செல்வர் ஈ.வி.கே. சம்பத் அவர்களுக்குத் தொலைபேசி மூலம் கவிஞர் பொன்னடியான் தகவல் தெரிவித்து உடனடியாக வருமாறும் கூறினார்.

அப்போது சம்பத் அவர்கள் அவர்கள் வீட்டில் இல்லை. ஏதோ கூட்டத்திற்குச் சென்றிருக்கிறார். என்ற தகவல் கிடைத்தது. தகவல் தெரிவித்தவர் திருமதி சுலோசனா சம்பத் அவர்கள்.

இரவு நான் வீட்டிற்கு வந்துவிட்டேன். இரவு முழுவதும் பாவேந்தரின் நினைவுதான். உறக்கமின்றித் தவித்தேன்.

**பாடிப்பறந்த குயில்**

பாவேந்தரின் உயிர் பிரியும்போது, (21.4.1964 காலை) நான் அவர் பக்கத்தில் இல்லை. கவிஞர் பொன்னடியான், அவர் துணைவியார் இன்னும் சிலர் இருந்தார்கள்.

பாவேந்தர் உயிர் பிரிந்த பிறகே நான் மருத்துவமனை சென்றேன். அப்போது அவரைச் சுற்றிலும் பாவேந்தர் அவர்களின் துணைவியார் திருமதி பழனியம்மாள், திருமகனார் மன்னர் மன்னன், கவிஞர் பொன்னடியான் ஆகியோர் சோகவெள்ளத்தில் புலம்பிக் கொண்டிருந்தனர்.

பாவேந்தரின் திருமகனார் மன்னர் மன்னன் புரண்டு அழுகிறார். கவிஞருடைய துணைவியார் கண்ணீரும் கம்பலையுமாகக் கணவரைப் பறிகொடுத்த துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறார். கவிஞர் பொன்னடியான் அவர்கள் மயக்கமுற்று வீழ்ந்துவிட்டார்.

பாவேந்தரின் மறைவுச் செய்தி முக்கியமானவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது.

**உடலுக்குக் காவல்**

மருத்துவமனையின் விதிகளின்படி பாவேந்தருடைய சடலம் சவக்கிடங்கிற்கு எடுத்துச் செல்லப்பட்டது. சவக்கிடங்கில் அவர் உடலைக் காவல் காத்தவன் நான். என்னுடன் இராசிபுரம் பெரியவர் அரங்கசாமி என்பவரும் இருந்தார்.

செய்தி கேட்டவர்கள் எல்லோரும் வந்துவிட்டனர்.



பாவேந்தரின் திருமகனாரின் நண்பரும் சினிமா வசனகர்த்தாவும், நடிகருமான பாண்டி செல்வராஜ் ஓடி வருகிறார். மன்னர் மன்னனைக் கட்டித் தழுவிக் குலுங்கிக் குலுங்கி அழுகிறார். சற்றைக்கெல்லாம் தன்நிலைக்கு வந்து, நண்பர் மன்னர் மன்னனைத் தேற்றுகிறார்.

பாவேந்தர் மறைந்த செய்தி கேட்டதும் மருத்துவமனைக்கு முதன்முதல் வந்தவர் சிலம்புச்செல்வர் ம.பொ.சி. அவர்கள். அவருடன் முத்தமிழ்க் கலாவித்வ ரத்தினம் தி.க. சண்முகம், தி.க. பகவதி ஆகியோரும் வந்தனர்.

அடுத்து டாக்டர் மு.வ. அவர்கள், கவிஞர் கண்ணதாசன் அவர்கள், கல்கண்டு ஆசிரியர் தமிழ்வாணன் அவர்கள் இன்னும் பலர் வந்து கூடிவிட்டனர்.

அந்த நேரத்தில் யார் யார் வந்தார்கள் என்பதை நான் கவனிக்கும் நிலையில் இல்லை. என் நினைவிற்கு வராத முக்கியமானவர்களும் இருக்கலாம்.

சிலர் மருத்துவமனைக்கு வந்தும் குறிப்பிடாமல் விட்டுவிட்டாரே என்று சொல்லலாம். மருத்துவமனைக்கு வந்தவர்களைச் சொல்லித்தான் ஆகவேண்டும். என் நினைவிற்குப்பட்டவர்களை மட்டும் இங்குக் குறிப்பிட்டிருக்கிறேன்.

மற்றவர்களைக் கூற முடியாததற்குக் காரணம் ஞாபக மறதிதான்.

அந்தச் சூழ்நிலையில் ஒவ்வொருவராகப் பார்க்கும் நிலையில் இல்லை. நிலைதடுமாறிய மனநிலை. எனவே 'இதைக் குறைவாக எண்ண வேண்டாம்.

கவிஞர் கண்ணதாசன் பாவேந்தரின் சடலத்தைக் கண்டு குலுங்கிக் குலுங்கி அழுத காட்சியை என்னால் மறக்கமுடியாது. அப்படியே உருகிவிட்டார்.

மருத்துவமனையிலிருந்து பாவேந்தரின் சடலத்தை வீட்டிற்கு எடுத்துவர வேண்டிய ஏற்பாடுகளைக் கவிஞர் கண்ணதாசன் அவர்கள் விரைவில் செய்துமுடித்தார்.

அமரர் ஊர்தியில் பாவேந்தர் சடலம் வைக்கப்பட்டுத் தியாகராய நகர், இராமன் தெரு, பத்தாம் எண்ணுள்ள அவர் இல்லத்திற்குக்கொண்டு வரப்படுகிறது.

பாவேந்தர் சடலத்துடன் பாவேந்தரின் துணைவியார், மகன் மன்னர் மன்னன், கவிஞர் பொன்னடியான், திரைப்பட நடிகர் பாண்டி செல்வராஜ், நான் ஆகியோர் வண்டியில் இருந்தவர்கள்.



பாவேந்தர் சடலம் அவர் வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட பிறகு நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்கள், விபத்தில் கால்முறிந்த நிலையில் இருவர் கைகொடுத்துத் தூக்கிவர வந்து பாவேந்தருக்கு இறுதி அஞ்சலி செலுத்தினார்.

பிறகு திரைப்படக் கலைஞர்கள், பிரமுகர்கள், கவிஞர்கள் பலர் வந்தனர். மறைந்த புரட்சிக் கவிஞருக்கு அஞ்சலி செலுத்தினர்.

பிற்பகல் இரண்டு மணிக்கு அவரது சடலம் சொந்த ஊரான புதுச்சேரிக்கு எடுத்துச் செல்லப்பட்டது.

அங்கு அவர் வாழ்ந்த பெருமாள் கோவில் தெரு இல்லத்தில் அவரது சடலம் பொதுமக்கள் பார்க்க வைக்கப்பட்டது; பின் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு அடக்கம் செய்யப்பட்டது.

இறுதி ஊர்வலத்தில் தமிழ்நாடு முதலமைச்சராக இருந்த டாக்டர் கலைஞர், பேராசிரியர், நாவலர், மற்றும் அரசியல் கட்சித் தலைவர்கள் கலந்துகொண்டார்கள் என்று தகவல் கேட்டுத் தெரிந்துகொண்டேன்.

தமிழகத்தின் தன்னேரில்லாக் கவிஞர், தன்மானக் கவிஞர், பாரெல்லாம் பாரதி புகழ் பரவவேண்டும் என்று சிந்தையெல்லாம் எண்ணிய கவிஞர், பாரதிக்குத்

தாசன் என்று தம் பெயரையே மாற்றிக்கொண்ட அரிமா மறைந்துவிட்டார்.

இனி இவரைப் போன்ற கவிஞர் தோன்றுவாரா என்னும் ஏக்கத்தில் நாம் இருக்கிறோம்.

**நாட்டுடைமை நற்பணி**

பாரதி பாடல்களைத் தேச உடைமை ஆக்கியதுபோல் தமிழ்நாடு அரசு, குறிப்பாக, தமிழ்நாடு முதலமைச்சராக உள்ள டாக்டர் கலைஞர் காலத்தில் பாவேந்தரின் நூல்கள் தேசிய உடைமை ஆக்கப்பட்டதை எண்ணி மகிழ்ச்சியடைகிறோம்.

இந்தப் பெருமை டாக்டர் கலைஞரையே சாரும்.

**கடைசிப் படைப்பு**

பாவேந்தரின் இறுதிக்காலத்தில் எழுதிய நாடகம் ‘இந்த உலகில் கந்தர்வ மங்கை’ என்பதாகும். இதுவே பாவேந்தருடைய கடைசிப் படைப்பு.

இந்த நாடகத்தைப் பாவேந்தர் அவர்கள் சொல்லச் சொல்ல எழுதியவன் நான் என்பதிலே பெருமை கொள்கிறேன்.

பாவேந்தரிடம் எத்தனையோ பேர் மாணவர்களாகவும் தொண்டர்களாகவும்



பணியாற்றியிருக்கிறார்கள். இராமாயணத்தில் இராமபிரான் இலங்கை செல்ல, கற்பாலம் அமைக்க வானரவீரர்கள் பணி செய்தபோது ஒரு சிறிய அணிலும் சிறுகல்லைப் போட்டு இராமபிரானுக்குத் தொண்டு செய்து பூரிப்பில் ஆழ்ந்ததுபோல், நானும் என்னால் இயன்ற தொண்டைப் பாவேந்தர் அவர்களுக்குச் செய்து மனம் மகிழ்வெய்துகிறேன்.

**நன்றிக்குரிய நல்லெண்ணம்**

பாவேந்தர் அவர்கள் இறுதிக்காலத்தில் விரும்பியவை:

'பாரதியார் படம் நல்லமுறையில் எடுக்கப்பட்டு, தமிழ்மக்கள் மட்டுமல்ல, உலகமக்கள் பாராட்டவேண்டும். இதுவே ஐயர் அவர்களுக்கு நான் செய்யும் கைம்மாறு' என்றார்.

**உதவியாளரை உயர்த்த**

என்னைத் திரைப்படத்துறையில் பாரதி படம்மூலம் புகுத்தி அதன்மூலம் வளமான வாழ்க்கையை எனக்கு அமைத்துத் தரவேண்டும். இலக்கிய ரீதியாக மட்டும் கவிஞனாக இருக்கக்கூடாது. பொருளாதார வசதி பெற்று வறுமையற்ற வாழ்க்கை நான் வாழவேண்டும் என்பதே அவருடைய பேரவா.

அவர் வீட்டில் அவருக்கு உதவியாக இருந்த இராகவராசன் என்ற இளைஞரைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் சேர்க்கவேண்டும் என்பதும் அவருடைய அவா.

பாவேந்தர் நலிந்தநிலையில் கூட இருந்து உதவிகள் புரிந்தவர் இராகவராசன். மருத்துவமனையில் பாவேந்தர் இருந்தபோது அவரும் கூடவே இருந்தார்.

**பாவேந்தர் மாமனிதர்**

பாவேந்தர் அவர்கள் குழந்தை உள்ளம் கொண்டவர். பிறருக்கு உதவுவதில் தனக்கென ஒரு வழிமுறையை வகுத்துக்கொண்டவர். அன்பாகப் பேசுவதில் அலாதியான மகிழ்ச்சி அடைவார்.

சீக்கிரம் கோபம் வரும்; உடனே வந்த வழியே போய்விடும்.

எல்லோரையும் எதிலும் நம்பும் குணம் கொண்டவர். கொள்கையை நெறியாகக் கொண்டவர்.

கோழைகளின் உள்ளத்திலும் வீரம் பற்ற வைக்கும் கவியாற்றல் பெற்றவர். அவர் ஒரு முழுமனிதர். மனிதநேயம் கொண்ட மாமனிதர்.

பாரதியாரிடம் பக்தியும் மரியாதையும் கொண்டவர். பாரதியாரின் பாடல்களையோ,



அவரையோ யாராவது குறை கூறினால் சிங்கமாய்ச் சீறுவார். 'அவரைக் குறைசொல்ல நீ என்ன யோக்கியதை படைச்சிருக்கே' என்று கொதித்தெழுவார்.

தமிழ் என்னும் தலைப்பில் புனைந்த பாடலை நினைவு கூர்வார். எல்லோரும் பாரதியின் பாடலைப் படிக்கவேண்டும்; தாய்மொழியாம் தமிழை மதிக்கவேண்டும் என்று அடிக்கடி கூறுவார்.

தமிழே அவர் பேச்சு; தமிழே அவர்தம் மூச்சு.

அவர் அடிக்கடி கூறும் பாடல் இதோ:

**யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்**
**இனிதாவது எங்கும் காணோம்;**
**பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்**
**இகழ்ச்சிசொல பான்மை கெட்டு,**
**நாமமது தமிழரெனக் கொண்டு இங்கு**
**வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!**
**தேமதுரத் தமிழோசை உலக மெலாம்**
**பரவும்வகை செய்தல் வேண்டும்!**

**யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்**
**வள்ளுவர்போல், இளங்கோ வைப்போல்**
**பூமிதனில் யாங்கணுமே பிறந்த தில்லை**
**உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை!**
**ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்**
**வாழ்கின்றோம்; ஒருசொற் கேளீர்!**
**சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்**
**தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்!**

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்.
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்!
மறைவாக நமக்குள்ளே பழங் கதைகள்
சொல்வதிலே மகிமை இல்லை.
திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்!

உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளியுண் டாகும்
வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்றுப் பதவி கொள்வர்.
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்பு கண்டார்.

இப்பாடலைக் கம்பீரமான குரலில் பாடுவார். இன்றைக்கும் அந்த ஒலி என் செவிகளில் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது.

## வெள்ளையுள்ளம்

பாவேந்தர் அவர்கள் மனத்தில் எது சரி என்று பட்டதோ அதை மூடி மறைக்காமல் பட்டென்று கூறிவிடும் மன இயல்புகொண்டவர். பல கவிஞர்களின் கவிதைகளைப் படித்து நல்லதைப் பாராட்டியும் அல்லதைத், தவறைச் சுட்டிக் காட்டி மீண்டும் தவறு செய்யாமல் இருக்க அறிவுரை கூறியும் மரபைக் காத்தவர்.



**திருலோக சீத்தாராம் பற்றி**

அந்த வகையில் பாவேந்தர் அவர்கள் காலஞ்சென்ற எழுச்சிக் கவிஞர் திரிலோக சீத்தாராம் அவர்களைப் பலமுறை பாராட்டிக் களித்திருக்கிறார்.

அவர் சொல்லுவார்:

திரிலோக சீத்தாராமன், ஐயரின் பாடல்களைக் கரைத்துக் குடித்தவர். கவிதைகளைச் சீர்பிரித்து சொற்பிழையின்றிப் பாமரமக்களும் புரிந்துகொள்ளும் விதத்தில், கணீரென்ற குரலில் உயிர்த் துடிப்பு கொள்ளும்படிச் செய்து அவற்றிற்கு அழகான விளக்கமும் கூறுவதில் தனிச்சிறப்பு உடையவர்.

திரிலோக சீத்தராமன் மேடை ஏறிவிட்டால் பாரதியாராகவே ஆகிவிடுவார். பாரதியின் பாடல்களைப் பாடுவதிலே ஓர் ஆவேசம். துடிப்பு! எல்லோர் உள்ளத்தையும் அசைக்கும் ஓர் சக்தி அவரிடம் இருக்கும்.

பாரதியின் மறுபிறவியோ இவர் என்று எண்ணும்படி பேச்சில் துடிப்பு, உயிர் இருக்கும்.

அவர் ஐயரின் குயில்பாட்டைச் சொல்லி விளக்குகையில் பாரதியார் தத்துவங்கள் பளிச்சிடும். பாஞ்சாலி சபதத்தைப்பற்றிப் பேச ஆரம்பித்தால் அழுத

குழந்தையும் அழுகையை நிறுத்தும் அளவிற்கு அவையோரை மெய்மறக்கச் செய்துவிடுவார்.

உதாரணத்திற்கு ஒன்று:

சூதாட்டத்தில் சகுனியிடம் தருமன் அன்னத்தையும் தோற்றுவிடுகிறான். பணயம் வைக்க ஏதுமில்லை. அப்போது சகுனி, உன் மனைவி பாஞ்சாலி இருக்கிறாளே- என்று கூற, தருமன் மனைவியைப் பணயமாக வைத்துவிடுகிறான் என்ற பகுதியைப் பாரதி கூறுவதை,

**பாவியர் சபைதனிலே - புகழ்ப்**
**பாஞ்சால நாட்டின் தவப்பயனை,**
**ஆவியில் இனியவளை, உயிர்த்து**
**அணிசுமந் துலவிடு செய்யமுதை**
**ஒவியம் நிகர்த்தவளை - அரு**
**ளொளியினைக் கற்பனைக் குயிலதனைத்**
**தேவியை, நிலத்திருவை - எங்குந்**
**தேடினுங் கிடைப்பருந் திரவியத்தை**

**படிமிசை இசையுறவே - நடை**
**பயின் றிடும் தெய்வீக மலர்க்கொடியைக்**
**கடிகமழ் மின் னுருவை - ஒரு**
**கமனியக் களவினைக் காதலினை**
**வடிவுறு யோழசை - இன்ப**
**வளத்தினைச் சூதினில் பணயம் என்றே**
**கொடியவர் அவைக் களத்தில் - அரக்**
**கோமகன் வைத்திடல் குறித்து விட்டான்.**



உணர்ச்சி பொங்கும் ஆக்ரோஷமான அனல் கக்கும் பாடல் வரிகளை வலுவான உயர்த்திய குரலில் சொல்லும்போது பாரதியே நின்று பேசுவதுபோல் அனைவரையும் மனந்துடிக்க வைக்கும் பேச்சு அப்பப்பா! அப்படி மெய்சிலிர்க்க முழக்கமிடுவார்.

அவற்றை நான் அடிக்கடி அவரைப் பேசச் சொல்லி என்நிலை மறந்திருக்கிறேன்.

இதனை என்னிடம் கூறும்போது அவர்கள் கண்களில் நீர் முட்டியதைப் பார்த்தேன்.

இந்த நிகழ்ச்சியைக் கூறக் காரணம் பாவேந்தர் அவர்கள் தமிழ் மொழிக்காக, தமிழே மூச்சாகக் கொண்ட பாரதி காட்டிய பாதையில் சென்ற கவிஞர்களை மனந்திறந்து பாராட்டத் தவறியதில்லை என்பதைச் சுட்டிக் காட்டவே.

என் வாழ்நாளில் எத்தனையோ பேர்களுடன் பழகி யிருக்கிறேன். அறிஞர் பெருமக்கள், செல்வந்தர்கள், அமைச்சர்கள், பாட்டாளிகள், தொண்டர்கள் என, இப்படிப் பல்வேறு வகைப்பட்டவர்களுடன் என் தொடர்பு இருந்திருக்கிறது. இன்னமும் இருந்து வருகிறது.

ஆனால் பாவேந்தர் அவர்களிடம் நான் பழகிய அனுபவங்கள் என் அறிவைச் செப்பம் செய்தது. அவர்

கொள்கையில் நான் மாறுபட்டிருக்கலாம். நோக்கம் ஒன்றுதான். இலக்கு ஒன்றுதான்.

தமிழ்மொழி சிறக்கவேண்டும். தமிழ்நாடு புகழ்பெற்று உயரவேண்டும் என்ற ஒரே சிந்தனையில் நானும் பாவேந்தரும் ஒரே நேர்கோட்டில் நிற்கிறோம்.

பாவேந்தர் அவர்கள், என்னிடம் ஓர் தகப்பன், பெற்ற பிள்ளையிடம் கொண்ட பாசம் எப்படியோ அப்படிப் பழகினார்.

தமிழ் தமிழ் என்றே பாடிப் பறந்த குயில் பாவேந்தர் அவர்கள்.

எனக்குத் தெரிந்த அளவில் பாவேந்தர்பற்றி எழுதியிருக்கிறேன்.

பாரதிக்கு ஆண்டுதோறும் நினைவுநாளும், பிறந்த நாளும் கொண்டாடுகிறோம். அதே போலப் பாரதிதாசன் அவர்களுக்கும் நினைவுநாளும், பிறந்த நாளும் தமிழகம் முழுவதும் சிறப்பாகக் கொண்டாடப்பட வேண்டும்.

பாரதியும் பாரதிதாசன் அவர்களும் நம் தமிழ் நாட்டிற்கு இரு கண்கள் போன்றவர்கள்.

ஒருசிலர் பாரதியை உயர்த்தியும் பாரதிதாசனைத் தாழ்த்தியும், இன்னும் சிலர் பாரதிதாசனை உயர்த்தியும்.



பாரதியைத் தாழ்த்தியும் பேசுகிறார்கள். அப்படிச் செய்வது நாம் தமிழுக்குச் செய்யும் துரோகம்.

பாவேந்தர் இன்று உயிரோடிருந்தால் பாரதியார் பற்றிய ஏற்றத்தாழ்வுப் பேச்சுக்கு இடம் தரமாட்டார். பாரதியைக் குருவாக ஏற்று வாழ்ந்தவர். அவர் புகழ் உலகமெல்லாம் பரவ வேண்டும் என்று பேரவா கொண்டவர்.

பாவேந்தரே, பாரதியாரிடம் கொண்டிருந்த மதிப்பைப் பிறர் கெடுக்கலாமா? பாரதியார் இல்லையேல் பாரதிதாசன் இல்லை.

எனவே கொள்கை ரீதியாக மாறுபட்ட கருத்துகள் நாம் கொண்டாலும் தமிழுக்காகப் பாடுபட்ட பாரதியையும், பாரதிதாசனையும் பிரித்துப் பேசுவதற்கோ, தாழ்த்தி உயர்த்திப் பேசுவதற்கோ இடமில்லை.

பாரதியாரைக் கூறும்போது என்னை இந்த உலகிற்குக் கவிஞனாக அடையாளம் காட்டியவர் என்று பெருமிதத்தோடு பேசுகிறார்.

நாம் கட்சி, இனம், மொழி பேதங்களுக்கு அப்பாற்பட்டு, நாம் தமிழன் என்ற ஒரே நோக்கத்தில் பாரதியாரையும், பாரதிதாசனையும் போற்றுவோம்; புகழ்வோம்.

**பைந்தமிழ்த் தேர்ப்பாகன், அவன் ஒரு செந்தமிழ்த் தேனீ,**
**சிந்துக்குத் தந்தை, குவிக்கும் கவிதைக் குயில்**

என்று வாய் மணக்கப் பாரதியாரைப் பாடியவர் பாவேந்தர் பாரதிதாசன் அல்லவா?

நாமும் பாவேந்தர் காட்டிய பாதையில் பீடுநடை போட்டுப் புதியதோர் உலகம் செய்வோம்.



